திருமலை திருப்பதி தேவஸ்தானம், திருப்பதி.

# ஸ்ரீ வேங்கடேஸ்வரா மத்திய நூலகம் மற்றும் ஆராய்ச்சி மையம்

## விண்ணப்பம்

திருமலை திருப்பதி தேவஸ்தானத்தாரால் 'ஸ்ரீவேங்கடேஸ்வரா மத்திய நூலகம் மற்றும் ஆராய்ச்சி மையம்' ஒன்று ஏற்படுத்தப்பட்டு, அது அண்மையில் தேவஸ்தானத்தின் 1993ஆம் ஆண்டு வைரவிழா ஆண்டு ஒட்டி, பக்தர்களுக்காகத் தொடங்கி வைக்கப் பட்டுள்ளது. இந்தியக் கட்டிடக்கலை மற்றும் நவீன கட்டிடக் கலையைப் பின்பற்றி கட்டப்பட்ட மாபெரும் கட்டிடத்தில் இந்த மையம் தற்போது செயல்பட்டு வருகிறது. இந்து சமயத்தின், இந்திய மண்ணின் பெருமை பேசும் வேதங்கள், உபநிஷதங்கள், இதிஹாஸங்கள், புராணங்கள், தத்துவங்கள், சாஸ்திரங்கள் மற்றும் பகவத்கீதை ஆகியவற்றின் சம்பந்தமான அரிய நூல்கள், ஆவணங்கள் இந்தக் கட்டிடத்தில் இடம்பெற்றுள்ளன. சனாதன தர்மமான இந்து சமயத்தின் பெருமை பேசும் இந்தியக் கலாசாரம், தத்துவங்கள், சமயப் பிரிவுகள், இசை போன்றவற்றின் சம்பந்தமான ஆராய்ச்சிகள் மேற்கொள்ளவும், உரைக்கோவைகள், கருத்தரங்குகள் நடைபெறவும் இந்த மையம் செயல்படும். இந்து சமயம் சம்பந்தமான அரிய , இதுவரை வெளியிடப்படாத ஆராய்ச்சிக் கருத்துக்களும்; சம்ஸ்கிருத மொழியில் உள்ள மூல சமய நூல்கள், மொழிப்பெயர்ப்புகள் அடங்கிய நூல்களை வெளியிடுதலும் இந்த மையத்தின் பெரு முயற்சியாக அமையும். நவீன அச்சகம் ஒன்றினை நிறுவும் எண்ணமும் மேலாண்மையின் ப்ரிசீலனையில் உள்ளது. எனவே, இந்தியக் கலாசாரக் கோயிலாகவும், தலைசிறந்த கல்வி மற்றும் ஆராய்ச்சி நிறுவனங்களுக்கு ஒரு முன்னோடியாகவும் இந்த மையம் திகழ்ந்திடவே மேலாண்மை பெருமுயற்சி எடுத்து வருகிறது. இத்திட்டம் முழு அளவில் வெற்றிபெற, தகுந்த ஊக்கமும், ஆக்கமும், அடிப்படை தேவையாகிறது.

ஆகவே இந்த நூலகத்திற்குத் தாராளமான நன்கொடை அல்லது நூல்கள் வழங்கிடுமாறு பொதுமக்களையும், தனியார் அமைப்புக்கள் மற்றும் நிறுவனங்களையும் மேலாண்மை தாழ்மையுடன் கேட்டுக்கொள்கிறது. இந்த மையம் தன்னுடைய பொதுப் பணியில் மேலும் சிறந்தோங்கிட, தனிமனிதர்கள் அல்லது தனியார் அமைப்புக்கள் தங்களிடம் உள்ள இந்து சமய மற்றும் தத்துவங்கள் பற்றிய அரிய நூல்கள் அடங்கிய தனி நூலகங்களை இலவசமாக வழங்கிடவும் கேட்டுக்கொள்ளப்படுகிறுர்கள்.

எனவே தயைகூர்ந்து தாங்கள் அனுப்ப நினைக்கும் நூல்கள் அல்லது தொகையினை (வங்கி காசோலை மூலமாக) "சிறப்பு தனி அலுவர் (Officer on Special Duty), ஸ்ரீவேங்கடேஸ்வரா மத்திய நூலகம் மற்றும் ஆராய்ச்சி மையம், திருப்பதி-517502, ஆ. மா." எனும் முகவரிக்கு அனுப்புதல் வேண்டும்.

அரங்கின்றி வட்டாடி யற்றே நிரம்பியே
நூலின்றிக் கோட்டி கொளல். --குறள்



சென்றது இலங்கைமேல் செவ்வேதன் சீற்றத்தால்
கொன்றது இராவணனைக் கூறுங்கால் - நின்றதுவும்
வேயோங்கு தண்சாரல் வேங்கடமே விண்ணவர்தம்
வாயோங்கு தொல்புகழான் வந்து.

[தேவர்களின் வாயினால் துதிக்கத்தக்க உயர்ந்த பழமையான குணங்களையுடையவன் எம்பெருமான். அவன் அசுர குணம் படைத்த இராவணனை அழிப்பதற்காக அன்று இலங்காபுரி சென்றான். சேதனர் களான மக்கள் எக்காலத்தும் உய்யவேணும் என்று கருதி மூங்கில்கள் ஓங்கி வளர்ந்துள்ள குளிர்ந்த சாரலையுடைய திருவேங்கடமலையில் அர்ச்சாமூர்த்தியாக இன்று நின்று அருள்புரிகின்றான்.]

-இரண்டாம் திருவந்தாதி -25



# NAVAJEEVAN BLIND RELIEF CENTER (REGD.)

**(FREE H OME FOR THE BLIND AND AGED)**

2-21-A, SAPTHAGIRI ASHRAM, TIRUCHANOOR, TIRUPATI-517 503.

*"எந்தரோ மஹானுபாவுலு - அந்தரிகி வந்தனமுலு"*
**வணக்கம்.**

"எந்தரோ மஹானு பாவுலு" என்று பெரியோர்கள் கூறியபடி எத்தனையோ ஊர்-பெயர்-முகம் தெரியாத கருணை உள்ளம் கொண்ட ஆஸ்தீக அன்பர்கள், கடந்த 19 வருடங்களாக அளித்துவரும் ஆதரவின் காரணமாக திருப்பதி நவஜீவன் ஆச்ரமத்தில் சுமார் 95 பார்வையற்ற குழந்தைகளும் ஆதரவற்ற முதியோர்களும் இலவசமாக உணவு, உடை, இருப்பிடம் மற்றும் கல்வி அறிவு பெற்று பயன் அடைந்து வருகிறுர்கள்.

மேலும் விரைவில் 50 படுக்கைகள் கொண்ட ஒரு இலவச கண் மருத்துவமனையும் ஆஸ்தீக அன்பர்களின் உதவியுடன் நிர்மாணித்துள்ளோம.

## வேண்டுகிறோம் அன்பர்களின் உதவியை

திருப்பதி நவஜீவன் ஆசிரமத்தில் வசித்துவரும் ஆதரவற்ற முதியோர்கள் மற்றும் பார்வை யற்ற குழந்தைகளுக்கு தினந்தோறும் மூன்றுவேளையும் தொடர்ந்து அன்னதானம் நடைபெறுகிறது. திருப்பதி புண்யஸ்தலத்தின் நவஜீவன் ஆச்ரமத்தில் அன்னதானம் வழுங்க நாள் ஒன்றுக்கு சுமார் ரூ. 500/- செலவாகிறது.

ஆஸ்தீக அன்பர்கள் வருடத்தில் ஏதேனும் ஒருநாளில் (உஙகளுடைய பிறந்தநாள், திருமண நாள் குழந்தைகளின் பிறந்தநாள், அல்லது முன்னோர்களின் திதிநாளில்) நவஜீவன் ஆச்ரமத்தின் பார்வையற்ற குழந்தைகளுக்கும், திக்கற்ற முதியோர்களுக்கும் ரூ. 500/- காணிக்கையாக அனுப்பி ஒருநாள் அன்னதானம் வழங்க ஏற்பாடு செய்து ஸ்ரீவேங்கடேச பெருமாளின் அருளைப்பெற வேண்டுகிறேும்.

அன்னதானம் வழங்கும் அன்பர்களின் சாரபாக குறிப்பிட்ட நாளில் எங்கள் ஆசரம வளா கத்தில எழுந்தருளியுள்ள ஸ்ரீஏழுமலையான மற்றும ஸ்ரீபத்மாவதி தாயாருககு கூட்டுப் பிரார்த்தனை செய்வித்து பிரசாதத்துடன் விபரம் அனுப்பிவைக்கப்படும்.

நவஜீவனுக்கு அனுப்பி வைக்கப்படும் டொனேஷனுக்கு வருமான வரிச்சலுகை உண்டு. Contributions to Navajeevan Blind Relief Centre, Tirupati are exempted from Income Tax U/S 80 (G)

ஆஸ்தீக அன்பர்கள் தங்களது டொனேஷனை by Ch/DD/MO வாயிலாக NAVAJEEVAN BLIND RELIEF CENTRE என்கிற பெயரில் மேற்குறிப்பிட்ட அட்ரஸுக்கு அனுப்ப வேண்டுகிறேும்.

"ஆதரவற்றவர்களுக்கு அளிக்கும் உதவிகளும் ஆண்டவனுக்கு செய்யும் தொண்டாகும்" ஸ்வாமி விவேகானந்தா.

தலைமை அலுவலகம :
நவஜீவன் ஆச்ரமம்,
திருச்சானூர், திருப்பதி-517503.

நாராயண ஸேவையில்
K.S. ஆசார்யா
Founder / President

கிளைகள : பத்ராசலம (ஆ.பி.) வாரணஸி (உ.பி.)




"வேங்கடமே விண்ணோர் தொழுவதுவும் மெய்ம்மையால்
வேங்கடமே மெய்வினைநோய் தீர்ப்பதுவும்"

## ஏப்ரல் - 1998


மலர் 28 இதழ 11

தனிப்பிரதி ரூ. 4/- வருடச்சந்தா 48/-



சிறப்பாசிரியர் :

**திரு. எம்.கே.ஆர். விநாயக், ஐ.ஏ.எஸ்.**
செயலாட்சித்தலைவர்,
தி.தி.தேவஸ்தானம்,
திருப்பதி.

* * *

ஆசிரியர்:

**திரு. என்.எஸ். ராமமூர்த்தி, எம்.ஏ.,**

* * *

துணை ஆசிரியர்:

**திரு. வ.கோ. சொக்கலிங்கம், எம்.ஏ.,**

* * *

அச்சிடுபவர்:

**திரு. எம். லக்ஷமண் ராவ்,**
மேலாளர்,
தி.தி.தேவஸ்தான அச்சகம்,
திருப்பதி.

* * *

பிரதிகளுக்கு:
EDITOR,
"Sapthagiri" T.T.D., Tirupati.
Phone : 22294


உள்ளுறை





அட்டைப்பட விளககம் :

முன் அட்டை : ஸ்ரீ கோதண்டராமஸ்வாமி ஆலய உத்ஸவமூர்த்தி (திருப்பதி)

பின் அட்டை : ஸ்ரீ வேதநாராயணஸ்வாமி ஆலய உத்ஸவமூர்த்தி (நாகலாபுரம்)

# உங்களுடன்....

தனி மரம் தோப்பாகாது, ஒரு கை தட்டினால் ஓசை எழாது எனும் முதுமொழிகள் மக்களிடையே குறுகிய எண்ணத்தையும் அலட்சியப் போக்கினையும் வளர்ப்பனவாக விளங்கி மனித புத்தியினையும் மனித சக்தியினையும் செயலிழக்க வைத்துவிட்டனவோ எனும் அச்ச ஐயம் நம்மில் தோன்றியுள்ளது. தனி மனிதனால் முடியாதது ஒன்றுமே இல்லை. முடியாதென்பது முட்டாள்களின் வேதமாகும். ஒருவன் நினைத்தால் இந்த உலகினையே மாற்றி அமைக்கலாம். அழிவு வழியில் அல்ல ஆக்க வழியில்.

ஆக்க வழியா? எது அது! கேட்பதை எல்லாம் கொடுக்கும் கற்பக மரம் போல இருக்க இயலாவிட்டாலும் ஒரு எள்ளளவும் ஒருவர்க்கு தீங்கிழைக்காது நல்லெண்ணத்து டன் நற்செயலைச் செய்வதைக் குறிக்கும். அவ்வாறு நல்லதை செய்ய இயலாவிட்டாலும் அல்லதையாவது செய்யாதிருத்தல் அவசியம். இதுகுறித்தே வள்ளுவரும் தன் குறட்பாவில் "மறந்தும் பிறன்கேடு சூழற்க சூழின் அறஞ்சூழும் சூழ்ந்தவன் கேடு" அதாவது பிறனுக்கு கேட்டை விளைவிக்கும் தீய செயல்களை ஒருவன் மறந்தும் எண்ணக்கூடாது. அவ்வாறு எண்ணுவானேயானால் எண்ணியவனுக்கு கேட்டினை விளைவிக்குமாறு அறம் எண்ணும் என்கிறார்.

மனிதன் அறவழியில் நடந்திட சமய உணர்வுகளும், சமயச் சிந்தனைகளும் வழி வகுக்கின்றன. இவற்றினுக்கு உறுதுணையாக புராண இதிகாசங்களும், பாகவத பகவத் கீதையும் போதிய அறிவினை நல்கி நலமுற வாழ வழிகாட்டுகின்றன என்பதில் ஐயமில்லை. ஆயினும் அவ்வழியில் நடப்பவர்கள் மிகவும் குறைவு. ஏன் அப்பக்கம் போக மானிடன் தயங்குகிறான்? அது என்ன நெருப்பா அவனைச் சுட்டெரிப்பதற்கு! கல்லு முள்ளா காலில் குத்துவதற்கு! இல்லை இல்லை அவன் நேர் வழியில் நடப்பதைவிட குறுக்கு வழியில் நடந்தே பழக்கப்பட்டவன். அவன் இவ்வழிக்கு வருவதற்கு வருடங்கள் பலவாகும்.

ஒருவன் நல்லவனாகவும் அல்லவனாகவும் மாறுவதற்கு அவனுடைய மனமே முழு முதல் காரணமாகும். மனம் போன போக்கில் எண்ணத்தை அலைய விடுதல் கூடாது. தன்னம்பிக்கையை மனதிலே வளர்த்துக்கொள்ளுதல் வேண்டும். தன்னம்பிக்கைத்தான் தன்னை உயர்த்தும். அறனொடு நிற்றலே மானிடனின் தத்துவம். அறம் வழுவாது வாழ்வதே மானிடனின் இலட்சியம்.

மனிதனை அறவழியில் கொண்டு செல்லவே எம்பெருமான் இராம, கிருஷ்ணவதாரங் களை எடுத்து இம்மண்ணிற்கு இறங்கி வந்தான் என்பதை யாவரும் அறிந்த ஒன்றே. கடைசியில் கலியுகத்தில் வாழும் மக்களுக்கு எம்பெருமான் விட்டுச் சென்ற அறவுரைகள் என்ன என்பதை நாம் இதுவரை அறியவும் இல்லை அறிய முற்படவும் இல்லை.

ஒரு தனிமனிதன் இவ்வுலகில் எவ்வாறெல்லாம் சாதனைப் படைக்கலாம் மற்றவர்களை எப்படி எல்லாம் நல்வழிப்படுத்தலாம் எனும் உண்மைப் பொருளை உணர்த்துவதாகவே இவ் விரு அவதாரங்கள் விளங்குகின்றன என்றால் அது மிகையாகாது. அவ்வகையிலே பார்க்கும்போது நமக்கு கிருஷ்ணவதாரத்தைக் காட்டிலும் ஒருபடி மேலாக இராமவதாரம் நேர்மையின் பாதையில் உண்மைச் சம்பவங்களை படம் பிடித்து காட்டுகின்றன.

இராமகாதையில் மிளிரும் பாத்திரங்கள் யாவும் மனித இன மேம்பாட்டிற்கு ஊக்கு விப்பவனாக விளங்குவதை பார்க்கலாம். ஸ்ரீராம, இலக்ஷ்மண, பரத, சத்ருக்கினர் என்ற நான்கு அவதார மூர்த்திகளும் மனிதன் கடைபிடிக்க வேண்டிய பலவித தர்மங்களை நல்ல முறையில் நடத்திக் காட்டியிருக்கிறார்கள்.

பெண்தர்மத்தை சிறப்பாக விளக்கவே, நம்லோக மாதா "சீதாபிராட்டியாக" அவதரித் தாள். முக்கியமாக "சரணாகதி" தத்துவத்தை விளக்கவே திருமால், ஸ்ரீராமசந்திர மூர்த்தியாக

அவதரித்தான். "சரணகதிக்கு ஜாதிமத வேறுபாடு இல்லை; ஆண் பெண் வேறுபாடு இல்லை. உயர்திணை, அஃறிணைப் பாகுபாடு இல்லை" என்னும் உண்மையை ஸ்ரீராமன் வாயிலாக நாம் அறிய முடிகிறது. அந்த ஸ்ரீராமச்சந்திர மூர்த்தி "பிறன் மனை நோக்கா பேராண்மை"யுடன் வாழ்ந்துகாட்டி இக்கலியுக வாசிகளுக்கு ஓர் எடுத்துக்காட்டாக வும் விளங்குகிறான். அதோடுமட்டுமா! ஆணழகனாகவும், மனத்துக்கினியவனாகவும், காது, மூக்கு அறுபட்ட சூர்ப்பணகையால் "தருணௌ ரூபஸம்பந்நௌ ஸுகுமாரௌ புண்டரீக விசாலாக்ஷௌ" என்றெல்லாம் வர்ணிக்கும்படியாகவும் திகழ்ந்தான்.

நல்லவர்களை நண்பனாக்கியும் அல்லவர்களை அழித்தும் அற்புத வீரதீரச் செயல் களை செய்துள்ளான். எல்லோரையும் எளிதில் வசீகரிப்பதில் வல்லவனாக இருப்பதோடு அனைவரையும் மகிழும்படியும் செய்தான். இதுகுறித்தே 'ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ரநாமத்தில்' "ராமோ விராமோ விரதோ மார்க்கோ நேயோ நயோऽ நய: । வீர: சக்திமதாம ச்ரேஷ்டோ தர்மோ தர்மவிதுத்தம: ॥ என்று கூறப்பட்டுள்ளது. இவ்வகையிலே ஸ்ரீராமனின் சரிதத்தை கூறும் ஸ்ரீமத்ராமாயணத்தை பாராயணம் செய்வதால் சகல சித்தியும் கைகூடுவது திண் ணம். இதை மனதிற்கொண்டே ஸ்ரீபரமேசுவரன் பார்வதி தேவியிடம், மனிதனுக்கு எந்தெந்த சமயங்களில் எந்தெந்த செயல்கள் சித்திப்பதற்கு எந்தெந்த இராமாயண ஸர்க்கங்களையும் பாராயணம் செய்யவேண்டுமென்பதைக் கூறியிருப்பதாகப் பதினெண் புராணங்களில் ஒன்றான வாயு புராணத்தைச் சேர்ந்த "உமா ஸம்ஹிதை" என்ற பகுதி கூறுகிறது.

இதுபற்றியே ஸ்ரீவிஷ்ணுபுராணம், "ஏதேஷாம் சரிதம் ச்ருண்வந் ஸர்வ பாபை: ப்ரமுச்யதே। படத்யே ஷாம் து சரிதம் யோவை ச்ருத்தாஸ மந்வித: । ஸர்வாந் காமா நவாப்யேஹ ஹ்யந்தே ஸ்வர்க்கே மஹியதே ॥" இந்த சரிதத்தைக் கேட்பவர் எல்லாப் பாவங்களிலிருந்தும் விடுபடுகிறார்கள். ஊக்கமுடன் இந்த சூர்ய வம்ச சரிதத்தை எவன் ஒருவன் படிக்கிறானோ, அவன் இவ்வுலகத்தில் எல்லா விருப்பங்களும் நிறைவேறப் பெறு கிறான். விரும்பிய காமங்களைப் பெற்று முடிவில் சொர்கலோகத்திலும் எல்லோராலும் கொண்டாடப்படுகிறான் என்று குறிப்பிடுகிறது.

நம் வாழ்க்கையில் துன்பம் வரும்பொழுது இராமகதையைப் பாராயணம் செய்தால், துன்பங்கள் விலகி மனச்சாந்தி ஏற்படும் என்பது நம் முன்னோர்கள் கண்ட உண்மையாகும். அந்தக் கருத்துடன்தான் வால்மீகி முனிவர் இராமாயண காவியத்தைப் பாடினார். இராம நாமத்துக்கு அளவற்ற பெருமை உண்டு. "நன்மையும் செல்வமும் நாளும் நல்குமே! திண்மை யும் பாவமும் சிதைந்து தேயுமே! சென்மமும் மரணமும் இன்றித் தீருமே! இம்மையே 'ராம' வென்றிரண்டெழுத்தினால்" எனும் கவிச்சக்ரவர்த்தியாகிய கம்பரின் வாக்கு, கல்லையும் கனிவிக்கும்; இரும்பையும் இளக வைக்குமன்றோ!

நாளும் வன்முறைகளாலும் ஏமாற்றங்களாலும் அதனாற்றான் அமைதியின்மையாலும் அல்லலுறும் மக்களுக்கு இம்மண் விட்டுச் சென்ற 'இராமகாதை' நல்வழி காட்டிடுமா, நம்பிக்கைதான் தந்திடுமா என்ற ஒரு கேள்வியைக் கேட்டுக்கொண்டால், இல்லை என்று கூறினால், அவர்கள் சிந்திக்க தவறிவிட்டார்கள் என்றே கூறவேண்டும். இன்றைய நிலையில் நான் மட்டும் இராமனாக, இலக்ஷ்மணனாக, சீதையாக, அனுமனாக, குகனாக, வீடணனாக விளங்கினால் இந்த சமுதாயம் மேம்படுமா திருந்திடுமா என்று கேட்போர் ஒரு காந்திதான் இந்திய சுதந்திரத்திற்கு அகிம்சை வழியில் முதல்படி அமைத்தார் என்பதையும், அவர்தம் அணுகுமுறையே கடல்கடந்து தென்னாப்பிரிக்காவில் விடுதலை வேட்கையினை தோற்றுவித் தது என்பதும் நாம் கண்முன் கண்ட சரித்திரம் என்பதை சற்றே அறிந்தார்களேயானால், வீட்டில் ஒவ்வொருவரும் 'இராமகாதை'யின் பாத்திரங்களாக பிரகாசிப்பவர்களாய் அதனால் அவ்வீடுள்ள ஊரும் உன்னதமான நிலையில் சிறந்தோங்கும் என்பதில் ஐயமில்லை. 'படிப் பது இராமாயணம் இடிப்பது பெருமாள்கோயில்' என்று இல்லாமல் காகுத்தன் கதையை படித்தும் படித்ததை வாழ்க்கையில் மேற்கொள்ளலுமே நாம் நம்மை புனிதர்கள் என்று அழைத்துக் கொள்வதில் பொருள் இருக்கும்; அவ்இராமாவதாரத்திற்கு பெருமையிருக்கும்.

# செய்திச் சுருக்கம்

## திருமலையில்....

ஆந்திர மாநில கவர்னர் திரு. சி. ரங்கராஜன் அவர்கள் தன் துணைவியார் திருமதி. ஹரிப்ரியா ரங்கராஜன் அவர்களுடன் 26-2-98 வியாழக்கிழமை அன்று திருமலைக்கு வந்திருந்தார். அன்று அவர்களுடன் திருக்கோயில் அருகில், தி.தி. தேவஸ்தானச் செயலாட்சித் தலைவர் திரு. எம்.கே.ஆர். விநாயக் அவர்கள், இணைச்செயலாடசித்தலைவர் திரு. பாலசுப்ரமண்யம், தலைமை பாதுகாப்பு அலுவலர் திரு. விஜயகுமார், கோயில் துணைச்செயலாட்சித் தலைவர் திரு. எம். ஸ்ரீனிவாசுலு மற்றும் இதர உயர்நிலை அலுவலர்கள் வரவேற்றனர். சுவாமி தரிசனத்திறகுப் பிறகு ரங்கநாயக மண்டபத்தில் அர்ச்சகர்கள் மற்றும் வேத பண்டிதர்கள் அவர்களை ஆசிர்வதித்தனர். பின்னர் செயலாட்சித் தலைவர் அவர்கள கவர்னருக்கு சுவாமி சேஷவஸ்த்திரத்தையும், கோயில் பிரசாதத்தையும், தேவஸ்தானம் வெளியிட்டுள்ள பல அறநிலைப் புத்தகங்களையும், சங்கீர்த்தனை ஒலி நாடாவினையும் வழங்கினார். அன்றைய மறுதினம் 27-2-98 வெள்ளியன்று கவர்னர் மற்றும் அவருடைய துணைவியார் திருச்சானூர் சென்று ஸ்ரீபத்மாவதி தாயாரை தரிசித்தனர்.





## ஸ்ரீநிவாசமங்காபுரத்தில் பிரம்மோத்ஸவம்

திருப்பதி மாநகரத்திற்கு அருகாமையில் உள்ள ஸ்ரீனிவாசமங்காபுரத்தில் வீற்றிருக்கும் ஸ்ரீகல்யாண வேங்கடேஸ்வர சுவாமி பக்தர்களின் திருமணக் கோரிக்கைகளை நிறைவேற்றும் கண்கண்ட தெய்வம். திருப்பதியிலிருந்து சுமார் 30 நிமிடத்தில் சென்று தரிசிக்கவல்ல இத்திருக்கோயிலுக்கு நாளும் ஆயிரக்கணக்கான பக்தர்கள் வருகை புரிகின்றனர்.

16-2-98 முதல் 25-2-98 வரை பத்து நாட்கள் ஸ்ரீனிவாச மங்காபுரத்தில் ஸ்ரீகல்யாண வேங்கடேஸ்வரருக்கு பிரம்மோதஸவம் வைபவமாக நடைபெற்றது.

இதனை முன்னிட்டு இத்திருக்கோயிலில் 16-2-98 அன்று 'கோயில் ஆழ்வார் திருமஞ்சனம்' எனும் ஆலய சுத்தம் செய்யும் செயல்கள் நடைபெற்றன. அன்று மாலை பிரம்மோத்ஸவத்தின் துவக்கமாக எம்பெருமானின் சேனாதிபதியான ஸ்ரீவிஷ்வக்ஷேனர் முன்னிலையில் அங்குரார்ப்பண நிகழ்சசி நடைபெற்றது. 17-2-98 அன்று காலை 8-15 மணியிலிருந்து 8-45 மணி இடையிலான சுப முகூர்த்தத்தில் துவஜஸ்தம்பம் மேல் கருடன் கொடியை பறக்கவிடப்பட்டது. அன்று மாலை ஸ்ரீதேவி பூதேவி சமேத வேங்கடேஸ்வர சுவாமிக்கு ஊஞ்சல் சேவையும், பெரிய சேஷ



வாகனத்தில் திருவீதி வலமும் நடந்தது. 18-2-98 அன்று காலை சிறிய சேஷ வாகனத்திலும் இரவு அம்ச வாகனத்திலும், 19-2-98 அன்று காலை சிம்ம வாகனத்திலும் இரவு முத்துப்பந்தல் வாகனத்திலும் 20-2-98 காலை கல்ப விருக்ஷ வாகனத்திலும் மாலை சர்வபூபால வாகனத்திலும் சுவாமி திருவீதிவலம் வந்தார்.

21-2-98 அன்று இரவு நடைபெற்ற தங்க கருடசேவையில் ஸ்ரீகல்யாண வேங்கடேஸ்வரர் பக்தர்களுக்கு அருள் பாலித்தார். இதற்கு முன்னதாக திருப்பதி கோவிந்தராஜ ஸ்வாமி திருக்கோயிலிலிருந்து ஸ்ரீகோதாதேவிக்கு ஒப்பனைச் செய்த பூமாலைகளும், பட்டாடைகளும் திருவீதிவலமாக கொண்டுவரப்பட்டு சுவாமியை அலங்கரித்தனர்.



22-2-98 அன்று அனுமன், யானை வாகனத்திலும் 23-2-98 அன்று சூர்யபிரபை, சந்திர பிரபை வாகனத்திலும் சுவாமி திருவீதிவலம் வந்தார்.

24-2-98 செவ்வாய்க்கிழமை காலை 8-45 மணியிலிருந்து 10 மணி வரை ஸ்ரீனிவாசமங்காபுரம் புறவீதிகளில் ஸ்ரீகல்யாண வேங்கடேஸ்வர சுவாமி திருத்தேர் திருவிழா கோலாகலமாக கொண்டாடப்பட்டது. இவ்விழாவில் ஆயிரமாயிரம் பக்தர்கள் கலந்து கொண்டு கோவிந்த நாம கோஷமிட்டு கோவிந்தனின் அருளுக்கு ஆளானார்கள். அதன்பின்னர் அன்றிரவு சுவாமி குதிரை வாகனத்தில் மிகவும் அழகாக எழுந்தருளி காட்சியளித்தார்.

பிரம்மோத்ஸவத்தில் கடைசி நாளான 25-2-98 புதனன்று காலை 6-30 மணிக்கு ஸ்ரீதேவி பூதேவி சமேத ஸ்ரீகல்யாண வேங்கடேஸ்வர ஸ்வாமிக்கு பல்லக்கு உத்ஸவம் நடந்த பின்னர் சக்ரஸ்நானம் நடைபெற்றது. அன்றிரவு 8 மணியளவில் நடந்த துவஜாவரோஹணத்துடன் பிரம்மோத்ஸவம் இனிதே முடிவு பெற்றது.

## ஸ்ரீ கபிலேஸ்வரர் பிரம்மோத்ஸவம்

சேஷாசலமலை அடிவாரத்தில் உள்ள கபிலதீர்த்தத்தில் ஸ்ரீகாமாக்ஷி சமேத கபிலேஸ்

வர சுவாமிக்கு 23-2-98லிருந்து 28-2-98 வரை பிரமமோத்ஸவம் நடைபெற்றது.

இதனை முனனிட்டு முதல் நாள 23-2-98 திங்கட்கிழமை மாலை திருபபதி புறவீதி களில் ஸ்ரீவிநாயக சுவாமி திரு வீதிவலமாக கொண்டு வரப் படடு அதன் பின்னர் ஆல யத்தில் அங்குரார்ப்பணம் நடை பெறறது.

24-2-98 செவ்வாய்க்கிழமை அனறு காலை 10-30 மணியிலி ருநது 10-45 மணி இடையில் வேதமந்த்திரங்களின் ஆசார முறைபபடி மங்கள வாத்தி யம் முழஙக கபில தீர்த்தத்தில் உள்ள கபிலேஸ்வரர் கோயில் துவஜஸதம்பத்தின் மேல் துவ ஜாரோஹணம் சிறப்பாக நடத் தபபட்டது. அன்றிரவு யானை வாகனத்தின் மேல் ஸ்ரீகபி லேஸ்வர சுவாமி திருவீதி வலம் வந்தார்.

25-2-98 புதன்கிழமை அன்று மகாசிவராத்திரி தினத்தை முன னிட்டு கபிலேஸ்வர சுவாமிக்கு அபிஷேகம சிறப்பாக நடைபெற் றது. அன்று மாலை வெள்ளி நந்திவாகனத்தின் மேல் சுவாமி திருப்பதி வீதிகளில் திருவீதி வலம் வந்தார்.

26-2-98 வியாழக்கிழமை அன்று மாலை திருக்கோ யில வளாகத்தில் ஸ்ரீகாமாக்ஷி சமேத கபிலேஸ்வர சுவாமிக்கு கல்யாணோத்ஸவம் வைபவமாக நடைபெற்றது. அன்றிரவு சந் திர பிரபை வாகனத்திலும் 27-2-98 அன்று இரவு சேஷ வாகனத்திலும் ஸ்ரீகபிலேஸ்வர சுவாமி பக்தர்களுக்கு தரிசனம் தந்தார்.



28-2-98 அன்று காலை 9-10 மணிக்கு கபிலதீர்த்த புஷ் கரணியில் த்ரிசூல ஸ்நா னம் நடைபெற்றது. அன்று மாலை 6-30 மணிக்கு துவஜா வரோஹணம் நடைபெற்றது. அதன் பின்னர ஸ்ரீகபிலேஸ்வர சுவாமி இராவணசுர வாகனத் தின் மேல் திருவீதி வலம் வந்து பக்தர்களுக்கு இன்னருள் வழங்கினார்.

## பொறுப்பாண்மைக்குழுவின் முடிவுகள்

27-2-98 மற்றும் 28-2-98 அன்று திருமலை எஸ்.வி. விருந் தினர் விடுதியில் நடைபெற்ற தி.தி. தேவஸ்தானப் பொறுப் பாண்மைக் குழுக் கூட்டத்தில நிறைவேற்றப்பட்ட முடிவுகளை பொறுப்பாண்மைக் குழுத் தலை வர் திரு. கலிதிண்டி ராம சந்திர ராஜு அவர்கள் பத்தி ரிகை நிருபர்களுக்கு கீழ்கண்ட வாறு தெரிவித்தார்.

திருமலையில் ரூ. 20 கோடி செலவில இரண்டா வது "க்யூ" கட்டிடத்தொகுதி வளாகத்தினை ஒரே முறை 16 ஆயிரம் பக்தர்கள் அமரும வகையில சிறந்த முறை யில் எல்லா வசிதிகளோ டும் அமைத்தல். வைகுண டம் "க்யூ" கட்டிடத்தொகு தியை விட பெரியதான இந்த இரண்டாவது 'க்யூ' கட்டிடத் தொகுதி சுவாமி வசந்த மண்டபத்தின் பிற் பகுதியில் கட்டப்படும்.

* வைகுண்டம் 'க்யூ' கட்டிடத் தொகுதியில் உள்ள முதல் தளத்தில் ரூ. 34 இலட்சம் செலவில் சலவைக் கற்கள் பரப்புவதற்கு முடிவு எடுக் கப்பட்டது.
* திருமலை திருக்கோயில் எதிரே உள்ள வாகன மண் டபத்தினை ரூ. 4 இலட்சம் செலவில் புதுப்பிக்கப்படும்.
* திருமலையில் சுவாமி பிர சாதமான இலடடு மேலும் அதிகமாக ஐநதினை ஒவ் வொரு பக்தரும் பெறுவ தற்கு முடிவு எடுக்கப்பட் டது. இம்முடிவின்படி விரை வில் வைகுண்டம் 'க்யூ'வி லும், பி.பி.சி. கொட்டகை யிலும் சிறப்பு விற்பனைக கூடங்கள் திறக்கப்படும்.
* மேற்கு கோதாவரி மாவட் டம் வீரவாசரத்தில் கல் யாண மண்டபம் கடடு வதற்கு ரூ. 20 இலட்சம் அளிகக முடிவு செய்யப்பட் டது.

***

# ஆழ்வார்கள் கண்ட இராமன்

திரு. பா.அ. முனுசாமி - திருப்பதி.

பாக்களை அமைப்பதற்கு புலமை, அறிவு, முதலியவை அவசியம்தான். இவை மட்டுமே, பாக்களின் சிறப்பிற்குக் காரணங்கள் எனக்கூற இயலாது. தான் எழுதும் பொருளில் கவிஞனுக்கு திடமான நம்பிக்கை வேண்டும். நம்பினோர் கெடுவதில்லை இது நான்மறை தீர்ப்பு என்பதும் பெரியோர்களின் வாககு. அப்படிபபட்ட நம்பிக்கை இல்லாவிடில் அவனது படைப்பு நறுமணம இல்லாத மலராக காட்சியளிக்கும். இந்த நோககுடன் பாரக்கும போது ஆழ்வார்களின் பாடல்கள், பிரபந்தங்கள் என்று கூறுவதற்கு சிறப்பான தகுதி என்று கூறலாம்.

ஆழ்வார்களின் பாடல்களில் இராமனைப் பற்றியச் செய்திகள் ஆழ்ந்து காணப்படுகின்றன. இராமர் கதை கற்பகம் போன்றது. இல்வாழ்விற்கும், புறவாழ்விற்கும் அது அடிப்படையானது. கடவுளான அநத இராமனைப் பற்றிக் கூறினால் குற்றமாகுமோ? தான வளரத்த கிளியை இராமர் பெயரால அழைத்த ஒரு விலைமாதுக்கு முத்தி கிட்டியபோது, நல்ல மனத்துடன் இராமனைத் தொழுவோர் முத்தி அடைய மாட்டாரோ? அவன் அருளைப் பெற சிறப்பான பக்திவேண்டும் எனறு தமது இதயத்தில் குடிகொண்ட கருத்துக்களை தயக்கமின்றிக் கூறியுள்ளார்கள் ஆழ்வாரகள்.

திருமங்கையாழ்வார், பாடிய பெரிய திருமொழியில் இராமனைப்பற்றியப் பாடல்கள் காணப்படுகின்றன. திருமங்கையாழ்வார் இப்பாசுரங்களில் திருமகள் நாதனைத் தலைவனாகவும், தம்மை தலைவியாகவும் கொண்டு பாடியுள்ளார். இப்பாசுரங்களை திருமங்கையாழ்வாரின் அன்பின் பெருக்கை இனிது விளககுவனவாக விளங்குகின்றன.

"இரக்கம் இன்றியெங்கோன்
செய்ததீமை
இம்மையேயெமக்கு எய்திற்றுக்
காணீர்
பரக்க யாமின்றுரைத்துஎன?
ராவணன்
பட்டனனினி யாவர்க்கு
உரைக்கோம்?
குரக்குநாயகர் காளிளங்கோவே
கோலவல்விலி ராமபிரானே
அரக்கர் ஆடழைப்பாரில்லைநாங்கள்
அஞ்சினோம் தடம்
பொங்கத்தம்பொங்கோ
அங்கு வானவர்க்குகாகுலந்தீர
அணியிலங்கை அழித்தவன்
தன்னைப்
பொங்கு மா வலவன் கலிகன்றி
புகன்ற பொங்கத்தங்
கொண்டிவ்வுலகினில்
எங்கும்பாடி நின்றுடுமின்தொண்டீர்
இம்மையே இடரில்லை யிறந்தால்
தங்குமூர் அண்டமேகண்டுகொண்மின்
சாற்றினோம் தடம் பொங்கத்தம்
பொங்கோ"

[பத்தாம் பத்து - 2-ம் திருமொழி பா-1,10]

என்று பாடும்போது இராமபிரான் வானரத்தலைவனுக்கு அபயம் கொடுத்ததையும், அரக்கர்களின் அகம்பாவத்தை அழிக்கவந்த நாயகன் இராமபிரான் என்று தமது பாடல்களில் இராமனை வருணித்துப்பாடுகின்றுர் , ஆழ்வார்.

தென்னிலங்கை வேந்தன் இராவணனை வென்ற இராமனே! உன்னை எப்போதும் போற்றுகின்றோம் என்று பாடுகின்றுர். இதனை,

"ஏத்துகின்றோம் நாத்தழும்ப
இராமன் திருநாமம்
சோத்த நம்பீ சுக்கிரீவா
உம்மைத் தொழுகின்றோம்
வார்த்தை பேசீர் எம்மையுங்கள்
வானரம் கொல்லாமே
கூத்தர் போல ஆடுகின்றோம்
குழமணி தூரமே"

பெரியதிரு. 10-3

என்று சுக்கிரவனைத் தொழுகின்றுர். மேலும், இலங்கை வேந்தனை வென்ற இராமபிரானை 'ஒன்றும், ஒன்றும், ஐந்தும், மூன்றும்' என்று தொழுதுபாடுகின்றுர் திருமங்கையாழ்வார். இதனை,

வென்றதொல் சீர்த்தென்னிலங்கை
வெஞ்சமத்தன்றரக்கர்
குன்றம் அன்னார் ஆடியுய்ந்த
குழமணி தூரத்தைக்
கன்றி நெய்நீர் நின்ற வேற்கைக்
கலியன் ஒலிமாலை
ஒன்றும் ஒன்றும் ஐந்தும் மூன்றும்
பாடி நின்றுடுமினே"

என்றுதமது 10-ம பத்து மூன்றும் திருமொழியில் இராமன்

அற்புதஙகளைக் கூறிமகிழ்கின் றூர்.

இராமஅவதாரத்தில் ஈடுபாடு மிகுந்த குலசேகர ஆழ்வார், ஒரு பதிகத்தில் இராமாய ணக் கதைச்சுருக்கததைப் பாடி யுள்ளார். கிருஷ்ண அவதா ரத்தில் ஈடுபாடுமிகுநதவரா கிய பெரியாழ்வாரும் இராம னைப் பல பாடல்களில் பாடி யுள்ளார்.

வால்மீகி இயற்றிய இராமா யணத்தை ஒருவர் நாள்தோ றும் கூற குலசேகர மன் னன் அதைக்கேட்டு வரலா னான். அவ்வாறு கேட்கும் போது அவன் மனம் முழுவதும் இராமாயணத்திலேயே ஈடுபட்டு இருந்தது. பரந்தாமனாகிய இராமன் இவ்வுலகின்கண் தட வரைத்தோள் தசரதன் தன் செலவனாகத் தோன்றியதும், அஙஙனம் தோன்றிய அப் பெருமான் வசிட்டர்பால் கலை கள யாவும் ஓதி, உணர்ந்து விளங்குகையில், வந்த மறை முனிவராகிய விசுவாமித்திரருக் குப் பின் இலக்குமணனோடு சென்றது முதல் பிராட்டிக்குத் துனபம் இயற்றத்தொடங்கிய சூர்ப்பநகையின் மூக்கை நீக் கியதும், ஆகிய வரலாறு களைக் கூறிப் பின்பு குலசே கரரை நோக்கி, சேரரகுலவேந் தரே! இராமகாதை முழுவ தினையும் கேடபாய்' என்று கூறத்தொடங்கினாா. இவ் வாறு இராமாயணததில மிகு தியாக ஈடுபாடுகொண்ட குலசே கர ஆழவாா, ஆழ்ந்த வைண வச சிந்தனையைப் பெறலா யினாா.

குலசேகராழ்வார்; இராமன மீது அதிகபக்தி கொணடு, இரா கவனை, குழந்தையாக உருவ கித்து தாலாடடுப் பாடுகினறூா.

"மன்னுபுகழ்க் கௌசலைத்தன்
மணிவயிறுவாய்த்தவனே
தென்னிலங்கைக்கோன் முடிகள்
சிந்துவித்தாய் செம்பொன்சேர்
கன்னிநன்மா மதில் புடைசூழ்
கணபுரத்து என் கருமணியே!
என்னுடைய இன்னமுதே
இராகவனே தாலேலோ"

என்றுபாடுவது சிந்தனைக்கினி யச் செய்தியாகும்.

ஆழ்வார்களில் மிக குறிப் பிடத்தக்கவரான பெரியாழ் வார் தம்முடைய பாசுரங்க ளில் இராம அவதாரத் தினை மிகவும் சிறப்பித்து பாடுகின்றூர். இலங்கைக்குத் தூதுச்சென்ற அனுமன், இரா மன் கூறிய அடையாளங்க ளைச் சீதைக்குக் கூறுவதாகவும், கணையாழியைக் கொடுத்து மகிழ்வதாகவும பெரியாழ்வார் ஒரு பத்துப் பாடல்களைப் பாடி யுள்ளாா. பெரியாழ்வார் இராம அவதாரத்தில், செய்த லீலை களை புகழ்ந்து பாடும்போது, "வஞ்சனையுடைய அரககியா கிய சூரப்பனகையின் மூக் கையும், அவளுக்கு பாதுகாவ லாயிருந்த இராவணனுடைய தலையையும் அறுத்தவனே! நீ வெண்ணெயை வாரி, வாரி விழுங்கியபோது நான் சிறிதும் பயப்படாமல் உண்ண அடித் தேன். அந்தப் பிழையைப் பொறுத்து தெளிய நீரில் உண்டான செங்கழுநீர் சூட்டிக் கொள்ள வாராய்!" என்று பாடு கின்றூர். இதனை,

"கள்ள வரக்கியை மூக்கோடு
காவலனைத் தலைகொண்டாய்
அள்ளி நீ வெண்ணெய் விழுங்க
வஞ்சாதபடியே அடித்தேன்
தெள்ளிய நீரிலெழுந்த
செங்கழுநீர் சூட்டவராய்!"

என்ற பாடலால் அறியலாம்.

இவ்வாறு ஆழ்வார்கள் இரா மனின் அருஞ்செயல்களையும் பேரருளையும் வியந்து ஏத்தி யுள்ளாரகள். இவர்கள் ஏழு, எட் டாம் நூற்றூண்டுகளில் பாடிய இந்தப் பக்திப் பாடல்கள் பிறகு வந்த கம்பரின் காப்பி யத்துக்கு நன்கு வழிவகுத்தன. வால்மீகி இராமாயணத்தைத் தழுவியே கம்பர் தம் நூலை இயற்றிய போதிலும், அதில் உள்ள பக்திச் சுவைக்கு ஆழ் வார்களின் பாடல்களே அடிப் படையாக அமைந்தன என்று கூறுவது பொருந்தும்.

* * *

## விண்ணப்பம்

தி.தி. தேவஸ்தான கோயில்களில் மற்றும் திருமலை ஸ்ரீவேங் கடேஸ்வரர் கோயிலில் நடைபெறும ஆர்ஜித ஸேவைகளுக்காக அனுப்பப்படும் கட்டணத்தொகையினை தேசியமயமாக்கப்பட்ட வங்கிகளில் மட்டுமே பெறப்பட்ட 'டிமாண்ட் டிராப்ட்' D.D. அல் லது 'பேஆர்டர்' (Pay order) மூலமாக அனுப்புமாறு பக்தர்கள் கேட்டுக்கொள்ளப்படுகிறூர்கள். 'செக்' (Cheque)குகளை அனுப்பு வதால் கால விரயமும், நிர்வாகச் சிக்கலும் மேலாண்மைக்கு ஏற்படுகின்றது என்பதைத் தெரிவித்துக்கொள்கிறோம்.

செயலாட்சித் தலைவர்,
தி.தி. தேவஸ்தானம், திருப்பதி.

# இராமகாதையின் பாத்திரங்கள்

திரு.வளவ. துரையன் - கிருட்டினாபுரம்.

வால்மீகியார் வடமொழியில் எழுதித்தந்து பின்னர அருநதமிழில் கம்பநாட்டாழ்வார அருளிச்செய்ததுதான் இராமகாதை. இதை ஓர் இதிகாசநூல் என்றும், இலக்கிய நூல எனறும், பக்திநூல் என றும் அறவுரைநூல் என்றும் பல வாறுகக கொள்ளலாம்.

மாந்தன செம்மையாக வாழ்வ தற்கு அவன் கொள்ளவேண்டிய பணபுகளைக் கூறுவது தான் இராமகாதை. அன்பு, வீரம், கொடை பாசம் பணிவு, நனறி. பக்தி போன்றவற்றை மனிதன கடைப்பிடிப்பதோடு தீயனவற்றை விலக்க அவறறையும் அறிந்திருக்க வேண்டும்.

எனவேதான மாயம், சினம், வஞசகம், போனற சிலகுணஙக ளும கம்பநாடடாழ்வார் எழுதிய இராமகாதையில் சில பாத்திரங கள் மூலம காட்டபபட்டுள்ளன.

இறைவனும் மணணுலகில் பிறந்து மாந்தன் அடைய வேண்டிய இன்பதுன்பங்களை அடைநது ஒருமனிதன் எவ் வாறு வாழவேணடும்? அவனது கடமைகள் என்னெனன எனபதைத் தெளிவாக்குவதே இராமகாதையாகும்.

ஒரு சொல, ஒரு இல், ஒருவில் எனற உன்னதத் தத்துவததை உலகிறகுக் காட்டவே எம்பெருமான நாராயணன் கோசலையின மணிவயிறறில வந்துதித தான. அவன் பெயர் சொல்லி அவன் வழி நடநது அவன் புகழ்பாடினால் நற்கதி அடையலாம் என்று செப்பும் நூலே இராமகாதையாகும்.

புகழும், வரமும, வீரமும் வாய்க்கப் பெற்று இருந்தாலும் ஒருவன் பெண்ணாசை கொண் டால் அழிந்து போவான என் பதைக் காட்டுவதுதான் இராம கதையாகும்.

இராமகாதையில் பல்வேறு வகைப்பட்ட பண்புகளைக் கொண்ட பாத்திரங்களைப் பார்ககிறோம்.

இராமனிடமிருந்து ஒருமனிதன் எப்படி வாழவேண்டும் என் பது விளஙகும். அண்ணனிடம் எப்படி அடிபணிந்து அன்புகாட் டவேண்டும் என்பதற்கு இலக்கு வன ஓர் எடுத்துக்காட்டு. பாசம் என்றால என்ன என்ற வினா விற்கு விடைதான் பரதன. மகனின மீது மட்டற்ற அன்பை வைகக வேண்டும் என்பதை விளககிக காட்டுபவன் தசரதன். ஒரு குடம்பாலும் ஒருதுளி நஞ்சால் கெடடுவிடும் என்பதைக் காட்டுபவள் கைகேயி! வஞ்சகமே குறியாய சொல்லவேண டியதை சொல்லத்தகக முறையில கூறும் குறுகிய கூனி. தவம் செய்த தவமாம் கற்பினுககு அணியாக சீதாபிராட்டி, தாயினும நலலானாக விருந்தினரக்கு உயிரையே தரக்கூடிய குக்ப்பெருமான.

வஞ்சனையின் முழு உருவம் வாய்த்தது போன்ற சூர்ப்பனகை. நட்புககு இலககணமாய் சுக்ரீவன; வரமும் வலிமையும் இருந்தும் வழிதவறி மாயும் வாலி, அறிவில் தேர்ந்து அடக்கத்தின் உருவாய் அடியவர்க்கு எடுதது்ககாட்டாய் சொல்லின் செல்வன் அனுமன், எல்லாத் தகுதியும் புகழும் பெற்றும் மாற்றான் மனைவியைக கவர்ந்து பெண்ணாசையால் வீழும் இராவணன், பட்டறிவால் பயன் பெறும் மாரீசன், செஞ்சோற்றுக் கடன் தீர்க்கும் கும்பகருணன், தந்தை சொல் மிக்க மந்திரம் இல்லை என உயிரையும் தநதைக்காகத் தரும் இந்திர சித்தன். சேற்றில் முளைத்த செந் தாமரை வீடணன்.

இவ்வாறு இராமகாதையின் பாத்திரங்கள் அனைவரும் ஒவ்வொரு பண்பை பாரினுக்கு அளிக்கிறார்கள். இவர்களில் நல்லவர்களை மனத்தில் கொண்டு நல்ல பணபைக் கைக்கொண்டு இராமன் பெயர் உச்சரித்து நல் லகதி அடைவதே நமக்குரிய வழியாகும்.

இராமகாதையை உளப்பூரவமாக உணரந்து மனம், வாக்கு, காயம் ஆகியவற்றால் இராமகாதை வழி நடந்து நாமும் உய்வடைந்து பிறரையும் வாழ வைப்போமாக.



(தொடர் கட்டுரை)

# வைணவ வழக்குச்சொற்களும் பொருள்களும்

டாக்டர் மா. வரதராஜன் - திருப்பதி.

## பூ

பூகம்தொக்க பொழில்கள் - பாக்கு திரண்ட சோலை
பூங்கடம்பு - பூத்த கடம்பு
பூங்கணை - புஷ்ப பாணம்
பூங்காலம் - அழகிய காலம்
பூங்காவி - அழகிய செங்கழுநீர்
பூச்சி - பூவிலே உண்டானவள் பிராட்டி
பூசல் - கூப்பீடு, சண்டை, வருத்தம்
பூசினியும் காயாதோ - சுணை இல்லாதாருள்ள ஊரில் சுணையுள்ள பூசணிக்காய்
பூசுரர் - நிலத்தேவர்
பூஞ்சுனைத்தடம் - பூத்திருந்த குளம்
பூட்சி - பூண்டிருக்கை, உறுதி
பூட்டி - சேர்த்து
பூடுகள் - புல்பூண்டுகள்
பூண் - ஆபரணம்
பூண்கட்டுதல் - அலங்கரித்தல்; பலப்படுத்துதல்; உலக்கை முதலிய வற்றுக்கு பூண் கட்டினால் உடையாது, விரியாது
பூண்டு - பாரிஜாதம்
பூண்டநாள் - விடிந்தநாள்
பூண்டார் - பூண், தார்-பூண்-ஆபரணம் தார்-மாலை-ஆபரணமான மாலை.
பூண்டு கிடக்கை - பற்றிக்கிடக்கை
பூண்புனைமென் முலை - ஆபரணம் புனைந்ததும் மெல்லியதாயுள்ள முலை
பூணநூல் - பூணூல்
பூணாதனலும தறு-கண்வேழம் - தறியில் கட்ட இடம் கொடாமல் நெருப்பை உமிழும் கொடியகண்ணுடையயானை
பூணாரச்செப்பு - பூணான ஆரம் வைக்கிற செப்பு
பூணாரம் - பூணான ஆரம்
பூணி - நல்ல பசுக்கள்; கற்றாக்களும், கன்றுகளும்
பூணித்தல் - சத்தியம் செய்தல் பூணு கொனி என்று தெலுங்கு
பூணித்தொழு - மாட்டுக்கொட்டம்
பூத்தண்டுகுழாய் - பூத்து குளிர்ச்சியாயுள்ள திருத்துழாய்
பூதமைந்து - பஞ்சபூதங்கள் - நிலம், நீர், தீ, வாயு, ஆகாசம்
பூதலக்கிழத்தி - பூமிப்பிராட்டி பூதலம்-பூமி
பூந்தாமம் - அழகிய மாலை
பூந்துகில் - அழகிய பரியட்டம்; மெத்தென்றுகில்; பூத்தொழில் பட்டது
பூத்தருபுணர்ச்சி - அருங்கொம்பில் பூ இருந்தால் அதைக்கண்டு பறித்துத்தர வேணும் என்ன, நாயகன் தன்னை விரும்பாமல் பறித்துக்கொடுத்தால் அதுக்காக தழுவிக்கொள்ளுகை - ஆலிங்கனம் பண்ணுகை.
பூதி - புழுதி
பூதிகந்தம் - கெட்டவாசனை
பூநிலாய - பூமியிலே இருக்கிற
பூம் - அழகு, பொலிவு
பூம்பட்டு - அழகிய பட்டு
பூம்பாவை - பெரிய பிராட்டி
பூநெய் - தேன்
பூம்புட்டில் - பூக்குடலை, பூப்பறித்துவர எடுத்துப் போகும் போது தோளில் மாட்டிக்கொள்ள வசதியான கூடை
பூம்போது - போக்யமான புஷ்பம்
பூமகள் - பூவில் பிறந்த பெரிய பிராட்டி
பூமகன் - நான்முகக் கடவுள் பிரமன்
பூமரம் - பூத்து நிற்கிற மரம்
பூமிநாதன் - பூமேல்-தனியாளன் - பூவின் மேலிருப்பவளாய், தனி-ஒப்பற்ற பெண்மையை உடைய பெரிய பிராட்டியாருக்கு வல்லவன்
பூர்வாங்கம் - கூத்தாடுவதற்கு முன் பாட்டம்; நாடகம் ஆரம்பிப்பதற்கு முன் நடக்கும் நிகழ்ச்சி - ஒத்திகை பார்த்தல
பூரணபொற்குடம் - பூர்ணகும்பம்; நிறைகுடம் தீர்த்தம் நிறைந்துள்ள குடம்

| | | |
|---|---|---|
| பூரித்தல் | - | நிறைத்தல் |
| பூரியர் | - | பொல்லாங்குடையாரா |
| பூரி | - | பொல்லாங்கு |
| பூருவர் | - | முன்னோர் |
| பூரிததுககொடுத்தது | - | பெருத்துக்கொடுததது |
| பூவடிவு | - | புஷ்பத்தினுடைய மென்மை |
| பூவணை | - | பூம்படுக்கை |
| பூவளருந்தி | - | விஷ்ணுவின் நாபி, பத்ம நாபி |
| பூவன் | - | பூவிலே பிறந்திலன் - பிரமன் |
| பூவுக்கிட்டோம் | - | பெண்களுக்கு இட்டதை பூவுக்கு இட்டோம் என்று வழக்கு - குறிப்புச்சொல் |
| பூவார்கழல் | - | பூவாலல்லது செல்லாத திருவடி. ஆர்தல்-கூடுதலாய் பூக்கள் நிறைந்த திருவடி திருவேங்கடமுடையான் திருவடிக்கு பூவார்கழல்கள் என்று நம்மாழ்வார் இட்ட திருநாமம் |
| பூவிடுகை | - | புஷ்பம் சமர்ப்பிக்கை |
| பூவியல்நால் தடந்தோள் | - | பூமாறுத நாலு விசாலமான தோள்கள் |
| பூவியேல் | - | புகுவியாதே, நுழையாதே |
| பூவை | - | கறுத்தகிளி |
| பூவைப்பூ | - | காயாம்பூ, காக்கணம்பூ |
| பூவை யிட்டு பூவைக் கொள்ளுதல் | - | புஷ்பம் போன்ற திருவடிகளை இட்டு பூவை- பூமியைக் கொண்டான்-உலகளந்தான் |
| பூவேளைக்காரர் | - | பூவில்லாவிடில் வருந்தும் இளவரசர்கள். ராஜாக்களுக்கு அந்தந்த காலங்களில் பூ விடுகிறவர்கள் |
| பூவைவீயா நீர்தூவுதல் | - | பூவை, வீயா- அகலாத, நீரைப் பணிமாறுதல் பூவைத்திருவடிகளில் வீயா-சமரப்பிக்கையாய் பணிமாறி, நீரைத் தூவுதல் பூவை, வீயா- ஒழியா, விடாத என்றுய், பூவோடேகூடின நீரைத் தூவுதல் |
| பூவை வீயாம்மேனி | - | பூவைப்பூ நிறத்தை உடைய திருமேனி, பூவை ஒழியச்செல்லாத திருமேனி |
| பூளை | - | பூண்டு விசேஷம், பூளைப்பூ |
| பூன | - | சிலைமரம் |
| பூமாங்குத்தி | - | யானைவாகனத்தில் அர்ச்சகர் தரிக்கும் பூவால் செய்த சிறு ஈட்டி, (மாங்குத்தி - மிருகங்களைக் குத்தும் ஈட்டி) |



| | | |
|---|---|---|
| பெடை | | பெண் |
| பெண்கள்படும் நீர்வாய்ப்பு | | பெண்கள்-தேவிமார், படும்- அகப்படும்படியான, நீர்- நீர்மையினாலே, வாய்ப்பு- சுபமாக முடிக்கை; பெண்கள் கூடும் இடம்; |
| பெண்டாட்டி | - | பெண்டாக ஆளத்தகுந்தவள் |
| பெண்டிர்/ பெண்டுகள் | - | பெண்கள் |
| பெண்ணகலம் காதல் | - | பெண்களிடம் காதல் |
| பெண்ணடியான் | - | பெண்பிள்ளை முதலான் |
| பெண்ணமுது | - | பெண்ணாகிய அமுது, மகாலக்ஷ்மி |
| பெண்ணுக்கை | - | பெண் வடிவு |
| பெண்ணுளன் | - | பெண்ணை ஆளுகிறவன்; துணைவன்; எல்லாப் பெண்களுக்கும் துணைவன் |
| பெண்ணை | - | பனைமரம், பெண்ணையாறு |
| பெண்படையார் | - | பெண் பிறந்தார் எல்லாரும் |
| பெண் பயங்கள் | - | பெண் பசங்கள் என்பது போல. சிறு பெண்கள் என்றபடி |
| பெண்பிள்ளாய் | - | பெண்ணாகிற பிள்ளை, சிறு பெண் |
| பெண் பெண்டாட்டி | - | பெம்மண்டாட்டி, பெம்மனாட்டி என்பது இதன் கொச்சை |
| பெண் பெண்டுகள் | - | பெண்களே |
| பெண் மகள் | - | ஆண் மகனுக்குப் பெண்பால் |
| பெண்மையம்பூ | - | பெண்மையாகிற அழகான பூ |
| பெம்மான் | - | எம்பெருமான்; ஸர்வேச்வரன்; இராமாநுசருக்கு பெம்மான் எம்மான் என்று இரண்டு குமாரர்கள் இருந்ததாகச் சொல்லுவதுண்டு |
| பெம்மனார் | - | நாதன் |
| பெய்கிற்பார் | - | பெய்விப்பார் |
| பெய்கை | - | இடுகை; கொடுக்கை; உண்டாக்குகை, அலங்கரிக்கை |
| பெய்தகாவு | - | வைத்து. உண்டாக்கின சோலை |
| பெய்தறியா | - | பெற்றறியா |
| பெய்தால் | - | வார்த்தால் |
| பெய்யும் பூங்குழல் | - | வைத்தபூவையுடைய மயிர் முடி |

பெய்வளைககை - இட்டவளைகளையுடைய கை
பெயர்ந்திடுகை - பொய் சொல்லுகை
பெயிர்ந்திடும் - போக்குவிக்கும்
பெயர்த்தும் - அதுககுமேலே; மீண்டும்; பின்னையும
பெயர்தரும் - அசைந்து வரும், பெயர்ந்து போகும்; பேற்றைத்தரும
பெயர்ந்து - காலுக்குக்கால் பேர்ந்து, மாறி மாறி
பெயரகிலலேன் - அசையாமல
பெயருங்கருங்கடல் - அசையா நின்ற கடல்
பெரிதடும் - மிகவும் அழியா நின்றது; மிகவும் நோவ்படுத்தா நின்றது
பெரிதின சுவை - மிககசுவை
பெரிதொன்றே - பெரிதோ, அன்றென்றபடி
பெரிய கிருதயுகம் - ஏகாகாரமாய் வளர்ந்த கிருதயுகம்; ஒரு போகியான கிருதயுகம்; கேவலம் வைணவ தர்மமே நடையாடக்கடவகாலம்
பெரிய கிழாயர் - பெரியவர்
பெரிய கோயில் - ஸ்ரீரங்கம கோயில், பரப்பை நினைத்தன்று. ஸம்ஸாரிகள் கார்யம் வீடறுக்கையைப் பற்றி - வழக்கு தீர்த்தல் பற்றி - பெரிய என்கிறது. கோயில் என்பதுவும் ஸ்ரீரங்கமே
பெரிய கோலத் தடங்கண்ணன் - பெருத்து அழகியதான திருக்கைகளையுடையவன்; பெரியதடம் - இரணடும் சேர்த்து மிகப் பெரிய
பெரிய தண்புனல் - பிரளயம்
பெரிய திருநாள - ஸ்ரீரங்கத்தில் பங்குனி உத்திர உற்சவம்
பெரிய திருவடி - கருடன், பெருமாளுக்கு வாகனமாக இருபபதோடு அவருடைய திருவடிகளையும் கைகளில் தாங்குகையால் கருடன் அனுமான் இருவருககும் திருவடி என்று சமபிரதாய பெயராயிறறு. இருவரில் கருடன் பெரியவராகையாலே பெரிய திருவடி என்று பெயர்
பெரிய நீர - மகாஜலமான ஏகாரணவம்
பெரிய பரஞசோதி - ஸ்ரீவைகுண்டம், திருநாடு
பெரிய பிராட்டி - லக்ஷ்மி, பூமி நீளாதேவியை விடப்பெரியவள்
பெரிய பெருமாள் - ஸ்ரீரங்கம் மூலவருக்குப் பெரிய பெருமாள் என்று பெயர்
பெரிய முதலியார் - ஆளவந்தார், நாதமுனிகளுக்கும் பெயர்
பெரியவப்பன் - மகோபகாரகன்
பெரியவாய கண்கள் - பெரிதான கண்கள்
பெரியவான் - பரமபதம்
பெருக்குவாரையின்றியே - பெருக்கச் செயயும் காரணமில்லாலே
பெருகினால் - மங்களசூத்ரம் அறுந்தால் என்ற அவச்சொல்லுக்கு மாற்றாகச் சொல்லுவது
பெருங்கடல் மண்டினாப்போலே - சமுத்திரம் கோத்தாப் போலே; பெருமையைச் சொன்னபடி
பெருங்கடவுள் - பரதேவதை
பெருங்குடியாட்டம் - கிராம்ாதிகாரம்
பெருஞ்சுற்றம் - பேருறவு
பெருஞ்செய் - பெரியவிளைநிலம்
பெருத்தாக - பெருக்காக
பெருதிசை - பெரிய திக்குகள்
பெருந்தக்கோர் - கொண்டாடும் படியான பெருமையையுடையவர்கள்
பெருந்தகாய் - பரமகாருணிகனான பெரியோனே
பெருந்தகை - மகா பிரபாவம்; பிரபு; ராஜா
பெருந்தனிசாளன் - பெரிய கடன்காரன்
பெருந்தனிசு - பெரியகடன்
பெருந்தானம் - பெரிய குரல்; தானம் - ஸ்வரம்
பெருந்தூறு - சம்சாரம்/ பிறவி
பெருந்தெய்வம் - பரதேவதை
பெருந்தேவர - நித்ய சூரிகள்
பெருந்தேவி - பெருமைக்குத் தகுதியான தேவி
பெருந்தேவித் தாயார் - காஞ்சீபுரம் வரதராஜப் பெருமாளுடைய நாச்சியார் திருநாமம

(தொடரும்)

## ஸ்ரீராமரின் நவரஸம்

ஸீதா கல்யாண சரிதத்தில் சீரான சிருங்கார ரசம்;
பரமனின் வில்லை முறித்து வெற்றி கொண்டதில் வீரரசம்;
காகாஸுரனுக்கு அபயமளித்ததில் கருணை ரசம்;
கடலில் வானரர்களைக் கொண்டு பேரணை கட்டியதில் அற்புதரசம்;
சூர்ப்பனகையின் மூக்கறுத்ததில் ஹாஸ்யரசம்;
பாபச்செய்கை காண்பதில் பயரஸம்;
பிறர்தாரம் நோக்கும் போது பீபத்ஸரசம்;
ராவண ஸம்ஹாரத்தில் ரௌத்ரரஸம்;
முனிவர்களைக் கண்டு அளவளாவுவதில் சாந்தரஸம்.

தொகுப்பு: திரு. டி. பூபதிராவ் - சென்னை.

# திருமலை திருப்பதி தேவஸ்தானம், திருப்பதி.

## திருமலையில் தங்குவசதி விவரங்கள்

### ஸ்ரீ பத்மாவதி விருந்தினர் விடுதி மைய பரப்பு

| விடுதி மற்றும் குடில்கள் பெயர்கள் | கட்டணம் (நாள் ஒன்றிற்கு) |
|---|---|
| ஆம்ப்ரோ விருந்தினர் விடுதி | |
| (அ) பெரிய அறைத்தொகுதிகள் | |
| ஒவ்வொன்றும் இரண்டு ... | 1000-00 |
| (ஆ) சிறிய அறைத்தொகுதி-ஒன்று ... | 500-00 |
| பால குடீரம் | |
| (6 அறைத்தொகுதிகள்) ஒன்று ... | 500-00 |
| கோதாவரி சதன் | |
| (3 அறைகள்) ஒவ்வொன்றும் ... | 500-00 |
| கும்ப்ளே விருந்தினர் விடுதி | |
| (4 அறைத்தொகுதிகள்)ஒவ்வொன்றும் ... | 250-00 |
| கோகுலம் விருந்தினர் விடுதி | |
| (4 அறைத்தொகுதிகள்)ஒவ்வொன்றும் ... | 1000-00 |
| எச்.ஆர்.ஜி. | |
| (ஏ மற்றும் பி பகுதிகள்) ... | 400-00 |
| ஹரிசதன் விருந்தினர் விடுதி | |
| (குளிர்சாதன வசதிகொண்டது) | |
| (அறைத்தொகுதி(1 to 7) ஒவ்வொன்றும்).. | 1000-00 |
| ஹில் வ்யூ விருந்தினர் விடுதிகள்... | 100-00 |
| (பெரிய அறைத்தொகுதிகள்) | |
| ஹில் வ்யூ விருந்தினர் விடுதிகள் (சிறிய.. அறைத்தொகுதிகள்) | 50-00 |
| ஹில் வ்யூ சொகுசு குடில்கள் ... | 100-00 |
| இந்திரா விருந்தினர் விடுதி | |
| (4 அறைத்தொகுதிகள்)ஒவ்வொன்றும் ... | 500-00 |
| ஜகன்னாத பவன் ... | 500-00 |
| (4 அறைத்தொகுதிகள்)ஒவ்வொன்றும் | |
| மோடி பவன் | |
| (8 அறைத்தொகுதிகள்)ஒவ்வொன்றும் ... | 250-00 |
| நாராயணகிரி விருந்தினர் விடுதி I ... | 100-00 |
| (அ) மூலை அறைத்தொகுதி ... | 150-00 |
| நாராயணகிரி விருந்தினர் விடுதி II ... | 100-00 |
| (அ) மூலை அறைத்தொகுதி ... | 150-00 |
| நாராயணகிரி விருந்தினர் விடுதி III ... | 100-00 |
| (அ) மூலை அறைத்தொகுதி ... | 150-00 |
| நாராயணகிரி குடில்கள் | |
| (17 அறைத்தொகுதிகள்)ஒவ்வொன்றும் ... | 400-00 |
| ராம் பகிச்சா விருந்தினர் விடுதி I ... | 100-00 |
| ராம் பகிச்சா விருந்தினர் விடுதி II ... | 100-00 |
| ராம் பகிச்சா விருந்தினர் விடுதி III ... | 100-00 |
| ஸ்ரீ பத்மாவதி விருந்தினர் விடுதி | |
| (பிரதானமானது) | |
| (அ) பெரிய அறைத்தொகுதிகள் | |
| ஒவ்வொன்றும் இரண்டு ... | 1500-00 |
| (ஆ) மற்றைய 7 அறைத்தொகுதிகள் | |
| ஒவ்வொன்றும் ... | 1500-00 |
| ஸ்ரீ லக்ஷ்மி நிலையம் | |
| (3 அறைத்தொகுதிகள்) ஒவ்வொன்றும்... | 500-00 |
| ஸ்ரீ நிகேதன் | |
| (3 அறைகள்) ஒவ்வொன்றும் ... | 1000-00 |
| ஸ்ரீ நிவாசா நிலையம் | |
| (5 அறைகள்) ஒவ்வொன்றும் ... | 500-00 |
| சாந்தி சதன் | |
| (7 அறைத்தொகுதிகள்) ஒவ்வொன்றும்... | 500-00 |
| சிறப்பமைப்பு குடில்கள் ... | 400-00 |
| எஸ்.வி. விருந்தினர் விடுதி ... | 100-00 |
| (அ) மூலை அறைத்தொகுதி ... | 150-00 |
| ஸ்ரீவாரி குடீர் விருந்தினர் விடுதி ... | 2000-00 |
| (குளிர்சாதன வசதி கொண்டது) | |
| (அறைத்தொகுதி ஒன்று முதல் 4 வரை முழு விருந்தினர் விடுதியும்) | |
| சுராபுரம் தோட்டம் குடில்கள் | 250-00 |
| சேஷாத்ரிநகர் விருந்தினர் விடுதி ... | 100-00 |
| வித்யாசதன் பெரிய அறைத் | |
| தொகுதி (ஒன்று) ... | 1500-00 |
| (அ) மற்றைய அறைத்தொகுதிகள் ... | 500-00 |
| (4 அறைத்தொகுதிகள்)ஒவ்வொன்றும் | |
| வராஹசுவாமி விருந்தினர் விடுதி ... | 100-00 |

### டி.பி. குடில்கள்

| | |
|---|---|
| (2 அறைத்தொகுதிகள்)ஒவ்வொன்றும் ... | 150-00 |
| தனி அறை ... | 30-00 |
| வெளிப்புற குடில்கள் ... | 75-00 |
| டி.பி.சி.யில் சிறப்பமைப்பு குடில்கள் | |
| (அ) குடில் எண்கள்61 A, B | |
| (குடில்களுக்கு உள்ளே) ... | 400-00 |
| (ஆ) 57, 58, 60 A, B ... | 400-00 |
| (இ) 62A, B; 64Q, A, B; 65, A, B; 66, 67 69 A,B ... | 400-00 |
| மங்களகிணறு குடில்கள்(எம்.பி.சி.) ... | 75-00 |
| (அ) (2 அறைத்தொகுதிகள்) | |
| ஒவ்வொன்றும் ... | 150-00 |
| முழு குடில் எண். 31, A,B; 31 C.D ... | 150-00 |
| வேலி வ்யூ குடில் (வி.வி.சி.) ... | 75-00 |
| (3 அறைத்தொகுதிகள்) | |
| ஒவ்வொன்றும் 44 AB; 47 AB; 50 AB ... | 150-00 |
| ஆழ்வார் ஏரி குடில்கள் (ஏ.டி.சி.) ... | 50-00 |
| ஏ.டி.சி. தனியறை (ஒவ்வொன்றும்) ... | 30-00 |
| அஞ்ஜனாத்ரி நகர் குடில்(ஏ.என்.சி.) ... | 15-00 |
| கருடாத்ரி நகர் குடில்(ஜி.என்.சி.) ... | 15-00 |
| சஙகுமிட்டா குடில்கள்(எஸ்.எம்.சி.) ... | 15-00 |
| சேஷாத்ரிநகர் குடில்கள்(எஸ்.என.சி.) ... | 15-00 |
| ஹில்வ்யூ குடில்கள் | |
| (சாதாரணமானவை) ... | 15-00 |

(திருமலையில் தங்குவசதி கோரும் யாத்திரிகர்கள் ரூ. 100/-ஐ "Assistant Executive Officer, (Reception I) T.T.D., Tirumala" எனும் பெயரில் ஒரு வங்கி காசோலை மூலமாக, தங்கும் தேதி பற்றிய ஆங்கிலததில எழுதப் பட்ட விவரங்களுடன்; மேற்குறிப்பிட்ட முகவரிககு 30 நாடகளுக்கு முனபேயே அனுப்புதல் வேண்டும்.)

# நடையில் நின்றுயர் நாயகன்!

சதயன

நடையில் நின்றுயர் நாயகன்
தோற்றத்தின்
இடைநி கழ்ந்த இராமாவ
தாரப்பேர்த்
தொடைநி ரம்பிய தோமறு
மாக்கதை
சடையன் வெண்ணெய்
நல்லூர்வயின் தந்ததே.
(11, பாயிரம், கம்பராமாயணம்)

## ஒழுக்கத்தின் விழுப்பம்

உலகில் வாழும் மாந்தர்க ளுள் ஒழுக்கமுடையவரே என் றும் யாவராலும் போற்றப்ப டுகின்றனர்.

நடைஎனினும் ஒழுக்கம் எனி னும் ஒன்றே! 'நடையில் நின் றுயர் நாயகன்' என்று இராம பிரான் கம்பரால் குறிக்கப்படு கிறான்.

ஒழுககம் என்பது தததமக குரிய நிலையில் வழுவாது நிற் றலாகும.

ஒழுக்கமுடையவராதல் அரிது. அதனினும் அரி'து ஒழுக்கத்தில் ஊன்றி நிற் றல். எந்தநிலையிலும கலங் காது, இன்னல்கள் அனைத் தையுப இன்முகத்தோடு ஏற்று அடங்கி வாழ்வோர் இறைவ ராகவே மக்களால் மதிக்கப்படு வர. அவர் ஏற்றமும் தோற்ற மும மலையினும் மாணப்பெ ரிது.

நிலையில் திரியாது
அடங்கியான் தோற்றம்
மலையினும் மாணப்பெரிது

## நடையில் நின்றுயர் நாயகன்

நடையில் நின்றுயர் நாயக னாக இராமபிரான் போற்றப்ப டுவது ஏன்?

இராமபிரான் குணங்களால் உயர்ந்த வள்ளல்.' 'யாரும் செப்பரும் குணத்து இராமன்' வாழ்க்கையில் பல்வேறு குண நலன்கள் ஒளிவிடுதலைக் காண லாம். 'அனந்தகோடி கல்யாண குணங்கள் உடையவன்' இரா மன். அவன் தன் நடையில் நின்று உயர்ந்த நிகழ்ச்சிகள் சிலவற்றைக் காண்போம்.



## நல்லமகன்

இராமன் தசரதனின் மகன். அரச குமாரனுக்கு இருக்க வேண்டிய அடக்கமும், பிறர் நலத்தில் அக்கரை காட்டும் பணபும் அவனிடம் மாண வப் பருவத்திலேயே மேலோங்கி இருந்தது. அரச குமாரன் என் னும் ஆணவம் அவன்பால் சிறி தும் இல்லை.

வசிட்டரிடம பாடம் பயி லும் இராமன் குருகுலத்திலி ருநது திரும்பிவருகிறான். எதி ரில் வரும் குடிகளை மதித்து நிற்கிறான். அவரகள் நலம் உசாவுகிறான.

எதிர்வரும் அவர்களை
எமையுடை இறைவன்,
முதிர்தரு கருணையின்
முகமலர் ஒளிரா,
'எதுவினை? இடர்இலை?
இனிதுநும் மனையும்?
மதிதரு குமரரும் வலியர்கொல்?
(132 திருஅவதாரப்படலம்)

எனவே, அரசகுமாரன் என னும் செருக்கின்றி, யாவராலும் ஏததரும் குணத்து இராமன இங்கே வளர்நது நிற்றலைக கணடு வியக்கிறோம.

## குருவாக்கே அறத்தின் வாக்கு

இராமன் 'அறததின் ஆழி!' எது அறம? எது மறம என் பதை நன்குணரநதவன். தாட கையை வதம் செய்யுமாறு குல குரு வசிட்டர் ஆணை இடுகி றார். 'பெண் எனப்பெருந்தகை'

நினைந்தான். எனவே, 'வடிக் கணை தொடுக்கிலன்' 'இது செய்!' என்று விசுவாமித்திரர் ஏவுகிறார்.

பெண்ணைக் கொல்லுதல் மறம் என்று உறுதியாக இருந்த இராமனின் கொள்கை தளர்கிறது. குருவின் வாசகமே இங்கே அறமாகப் படுகிறது.

'ஐயன் அங்கு அதுகேட்டு
'அறன் அல்லவும்
எய்தினால், "அது செய்க!"
என்று ஏவினால்,
மெய்ய! நின்உரை வேதம்
எனக்கொடு
செய்கை அன்றோ!
அறம்செயும் ஆறு'
(45 தாடகை வதைப்படலம்)

என்றான். மனக்குழப்பமில்லாமல், குருவின் வாக்கே அறம் என்று நின்று இங்கே இராமன் உயர்கிறான்.

## தந்தை, தாய் சொல் காத்தல்

'தந்தை தாய் தொழுது எழுக என்பதே முந்தையோர் கண்ட நெறி' கைகேயி இராமபிரானை அழைக்கிறாள்.

"ஒன்று உனக்கு உந்தை மைந்த! உரைப்பது ஒன்று உண்டு" என்கிறாள். "தந்தையும் தாயும் நீரே! தலைநின்றேன் பணிமின்!" என்கிறான் முதலும் மூலமுமாகிய முழுமுதற் பொருளாகிய இரான்!

"பரதன் நாடாளவும் நீ காடாளவும் வேண்டும்" என்பது அரசனின் ஆணை என்கிறாள் கைகேயி.

"ஏவா மக்கள் மூவா மருந்து" என்பதற்கொப்ப, "மின்னொளிர் கானம் இன்றே போகின்றேன்! விடையும் கொண்டேன்!" என்று புறப்பட்டு விட்டான் இராகவன்.

தாய் சொல்லே தாரக மந்திரம் என்று கொண்டு தந்தையின் வாய்மையைக் காக்கும் தனயனாகத் தசரத ராமன் மகனுக்குரிய நடையில் நின்று உயர்கிறான்.

## அன்புக் கணவன்

சீதா பிராட்டியைக் கைப்பிடித்த நாள் முதலாக இராமன் தன் மனைவியிடம் தீராக் காதல் கொண்டிருந்தான். இராமனும் சீதையும் மாறிப் புக்கு இதயம் எய்தியவர்கள். அகலகில்லேன் இறையும் என்று" சீதை இராமனிருக்கும் இடமே அயோத்தி என்று எண்ணி வாழ்ந்து வந்தாள். வினை விளை காலம் வந்தது.

சிற்றன்னை சொற்கேட்டு இராமன் கானகம் புறப்படுகிறான். மரவுரி தரித்துப் புறப்படும் இராமனுடன் தானும் வருவேன் என்று சீதை அடம் பிடிக்கிறாள்.

"செம்மை வாய்ந்த உன் பாதங்கள் கானகத்தின் வெம்மையைத் தாங்காதே!" என்று கவல்கின்றான் இராமன். "நின் பிரிவினும் சுடுமோ பெருங்காடு" என்று கூறித் தொடர்கிறாள் பிராட்டி.

இத்தகைய அன்பு வாய்ந்த சீதையையே தீக்குளிக்கச் சொல்கிறான் இராமன்!

மற்றொரு சமயம் நாட்டை விட்டே சீதையைத் துரத்திவிடுகிறான். இவ்விரு நிகழ்ச்சிகளும் பிராட்டியின் தூய்மையை உலகோர்க்கு உறுதிப்படுத்த இராமன் ஆடிய நாடகங்கள்!

சீதையைப் பிரிந்தலிருந்து மீட்டது வரை இராமன் ஏங்கிய ஏக்கமும், அடைந்த தாபமும் அப்பப்பா! சொல்லியே மாளாது.

கானகம் முழுமையும் அவனுக்குச் சீதையாகவே காட்சி அளித்தது. சீதையின் எண்ணமாகவே இருப்பதால், அவள் தன்னுடன் இருப்பதாகவே இராமன் எண்ணுவான். இவ்வாறு எல்லா நிலைகளிலும் தன் மனைவியின் பால் மாறாக் காதல் கொண்டவனாக - மணட்டியின் மனங்கவர் கணவனாக நின்று நிலைத்து, ஏகபத்தினி விரதத்தைக் கடைப்பிடித்து உலகுக்கெல்லாம் ஓர் எடுத்துக் காட்டான கணவனாக இன்றும் காட்சி அளிக்கிறான் சீதாராமன்.

## விருப்பு வெறுப்பற்ற இறைவன்

மன்னனின் ஆணை என்று கைகேயி இரண்டு செய்திகளை இராமனிடம் கூறுகிறாள். தனக்குரியதான அரச பதவியைப் பரதனுக்கு அளிக்க வேண்டும் என்பதைக் கேட்டபோதும் பதினான்கு ஆண்டுகள் தான் கானகம் செல்லவேண்டும் என்பதனை அறிந்தபோதும் அவன் முகம் எவ்வித மாற்றமும் கொள்ளவில்லை. மாறாக, அப்பொழுது அலர்ந்த செந்தாமரையாக அவன் முகம் விளங்கிற்று.

"இப்பொழுது எம்மனோரால்
இயம்புதற்கெளிதோ? யாரும்
செப்பரும் குணத்து இராமன்
திருமுகச் செவ்வி நோக்கின்,
ஒப்பதே முன்புபின்பு, அவ்வாசகம்
உணரக் கேட்ட
அப்பொழுது அலர்ந்த
செந்தாமரையினை வென்றதுஅம்மா"
(112, கைகேயி சூழ்வினைப்படலம்)

விருப்பும் வெறுப்பும் சலனமும் அற்ற இராமனின் மன நிலையைக கண்டு அவனைக் கடவுளாகவே காண்கிறோம்.

### தம்பியர்க்கேற்ற தமையன்

தம்பியர் தன்மீது வைத்திருக்கும் வாஞ்சையைப்போலவே, இராமனும் தன் தம்பியரிடம் அளவற்ற அன்பு வைத்திருந்தான். இராமனும் இலக்குவனும் குழலும் நூலும் போன்று இணைபிரியாது வாழ்ந்தனர்.

அண்ணன் மீது கொண்ட அளவற்ற அன்பால வரிவில் ஏந்திக காலைவாய் அளவும் தம்பி இலகுவன் பஞ்சவடியில் காத்து நின்றான்.

இததகைய அன்பு கொண்ட இலக்குவன் மீது போரில் இந்திரசிதது நாக பாசத்தை ஏவினான். இலக்குவன் மூர்ச்சையுற்றான். அதுகண்டு தம்பியின் உடல்மேல் விழுந்து இராமன் நெஞ்சுருகிக் கண்ணீர் பெருக்கினான். 'நான் இறந்தே போவேன்!' என்று அழுது புலம்பினான்.

"ஐயவன் ஆக்கைதன்மேல் விழுந்து
மார்பு அழுந்தப் புல்லி
உய்யவன் என்ன ஆவி உயிர்த்து
உயிர்த்து உருகு கின்றான்;
பெய்இரு தாரைக் கண்ணை
பெருந்துளி பிறங்க வானின்
வெய்யவன் தன்னைச் சேர்ந்த
நீல்நிற மேகம் ஒத்தான்"
(221, நாகபாசப்படலம்)

தம்பியரல்லாது தன்னுயிர் இல்லை என்று வாழ்ந்த இராமன் சகோதர வாஞ்சையில் விஞ்சி நின்று விழுமிய புகழ் பெற்று உயர்ந்தான்.

### நண்பர்களுக்கு அண்ணன்

இராமபிரானிடம் அன்பு காட்டி வந்தவன் குகன். குகனின் நட்பு குறையில்லாத ஒன்று. சுக்ரீவனிடமும் இராமன் இவ்வாறே மாசு மறுவற்ற அன்பைச் செலுத்தினான். அடைக்கலம் என்று வந்த அரக்கர் குலவிபீடனனிடமும் அவ்வாறே அளவற்ற அன்பைச் செலுத்தினான்.

வேடனையும், குரங்கினையும், அரக்கனையும் தம்பியராக ஏற்றுப் பாராட்டிய ஒழுக்க சீலன் இராமபிரானது ஆன்மநேயம் உலகுக்கெல்லாம் இன்றும் பாடமாக அமைதலைக் கண்டு இறும்பூது அடைகிறோம்!

குகனோடும் ஐவரானோம்முன்பு;
பின் குன்று சூழ்வான்
மகனொடும் அறுவரானோம்;
எம்முழை அன்பின் வந்த
அகன்அமர் காதல்ஐய! நின்னொடும்
எழுவர் ஆனோம்;
புகல் அரும் கானம் தந்து புதல்வராய்
பொலிந்தான் உந்தை!
(143,வீபீடணன் அடைக்கலபடலம்)

### போர் அறம் மாறுதவன்

முதல் நாள் போர். இராம ராவண யுத்தம், இராவணன் தேரிழந்தான்; ஆயுதம் இழந்தான்; மகுடமிழந்தான்; தோற்றான்; நாணி நின்றான். வஞ்சித்து மனையாளைக் கவர்ந்து சென்ற இராவணனை எளிதில் வெல்ல - கொல்ல முடியும். ஆனால் கருணை வள்ளல் என்ன செய்தான்? "இன்று போய்ப் போர்க்கு நாளை வா!" என்றான்.

"ஆள்ஐயா! உனக்கு அமைந்தன
மாருதம் அறைந்த
பூளை ஆயின கண்டனை;
இன்று போய், போர்க்கு

## உள்ளத்தூய்மை

திருவரங்கத்திலே இருந்து திருவரங்கநாதனுக்குப் பணிபுரிந்து திருமாலுடன் இரண்டறக் கலந்தவர் தொண்டரடிப்பொடியாழ்வார். இறைவன் திருவருளைப்பெற மனதில் தூய்மையும் சொல்லில் இனிமையும் வேண்டும். உள்ளத்தில் சினமும் பகைமை உணர்வும் இல்லாமல் இருக்கவேண்டும். துளசி மாலையை அணிந்து காவிரி நதியால் சூழப்பட்ட திருவரங்கத்திலே வாழ்கின்ற என் இறைவனே! என் கதிதான் இனி என்ன? என ஏங்கித்தவித்து அவர் பாடிய பாடல்.

மனதில் ஓர் தூய்மை யில்லை வாயில்ஓர்
இன் சொல் இல்லை
சினத்தினால் செற்றம் நோக்கித்தீவிளி
விளிவன் வாளா
புனத்துழாய் மாலையானே!
பொன்னிசூழ் திருவரங்கா
எனக்கு இனிக் கதி என் சொல்வாய்
என்னை ஆளுடையகோவே"

இந்தப்பாடல் மூலம் சமுதாயத்திற்கு அவர் உணர்த்தும் கருத்துக்கள் யாரிடமும் இனிமையாகப் பேச வேண்டும். உள்ளம் தூய்மையுடையதாக இருக்கவேண்டும். அனைவரிடமும் அன்பு செலுத்தி சிந்தையாலும் செயலாலும் யாருக்கும் தீங்கு செய்யா மனமுடையவராக விளங்கவேண்டும்.

தொகுத்தவர்: திருமதி. சு. பொன்னம்மாள் - புத்தூர்.

நாளைவா" என நல்கினன்-
நாகு இளங் கமுகின்
வாளை தாவுறு கோசல
நாடுடை வள்ளள்.
(255, முதல் போர்புரிபடலம்)

## வரம் கேட்ட வள்ளல்

தன்னைக் கானகம் அனுப்பியும், தனனுடைய மனைவி பிரிவதற்குக் காரணமாகியும், அருமைத தமபியர் அல்லல் படவும் பழியேற்றவன் கைகேயி என்பதை இராமன் என்றும் எண்ணிப் பாரத்ததே இல்லை. சீதை தீக்குளிகரும் போது வானிடைத் தசரதன் தோன்றுகின்ருன். வரம் கேட்குமாறு இராமனை வேண்டுகிருன்.

தன் தந்தை தசரதனால் துறக்கப்பட்ட கைகேயினையும், பரதனையுமும தாயும் தம்பியும் ஆம் வரம் கேட்ட 'தரும் நோக்கிய தோன்றல்' இராமனது பகைமை பாராட்டால் புண்புடை நடையினைப் பாராட்டாதவரும் உளரோ!

'ஆயினும், உனக்கு அமைந்தது
ஒன்று உரை' என அழகன்
தீயள் என்று நீதுறந்த
என்தெய்வமும் மகனும்
தாயும் தம்பியும் ஆம் வரம் தருக'
எனத் தாழ்ந்தான்
வாய்திறந்து எழுந்து ஆர்த்தன;
உயிர் எல்லாம், வழுத்தி,
(128, மீட்சிப் படலம்.)

தந்தையின் சினத்தையும் தணித்து, சிறறன்னை கைகேயிக்கும் தம்பி பரதனுக்கும் பெரும்பதம் தந்து நின்று உயர்ந்தவன் இராமன் அன்றோ!

## தோன்றிய அறம் நிறுத்தத்தோன்றினான்:

தன் நன்னடையால் நின்று உயர்ந்த இராமனின் உயர் ஒழுககங்களுககு எடுத்துக்காட்டுகள் எண்ணில்லாதன உள. அவற்றை விரிக்கிற் பெருகும். எனவே, சில நடைகளே காட்டப்பெற்றன. இராமனின் ஒவ்வொரு செயலும் அறத்தின் பாற்பட்டவையே! நல்லறத்தை நிலைபெறச் செய்யவே அறத்தின் நாயகன் வந்து தோன்றினான். உன்னத புருஷனுக்கு எடுத்துக்காட்டு இராகவன். அவன் ஒப்பற்ற இலட்சிய புருஷன்.

சிறந்த மனிதன் எப்படி இருக்கவேண்டும் என்பதை எடுத்துககாட்டவே இராமன் மனிதனாக அவதாரம் செய்தான். மனிதனாகப் பிறந்து, வழிகாட்டியாக வாழ்ந்து, மனிதனாக நடநது காட்டியவன் இராமன. தனககு நேர்ந்த இனனல்கள அனைததையும் பொறுத்துக்கொணடு, வேணடுதல் வேண்டாமை இல்லாதவனாக வாழ்ந்து காட்டிய உத்தமன இராகவன்.

இராமன் குணங்களை மானிடப்பண்புகளாகவே வாலமீகி சித்திரித்துக்காட்டினார்.

'வையத்துள் வாழ்வாங்கு
வாழ்பவன் வானுறையும்
தெய்வத்துள் வைக்கப்படும்'

என்னும் குறளுக்குச சானருகக் காட்டக்கம்பர இராமபிரானை மனித நிலையிலிருநதும் தெய்வ நிலைககு உயர்ததிக் காட்டினார். தெய்வ நிலையில் உள்ளவரால் அறத்தை நிலை நிறுத்தல் முடியும் என்பது அறிஞர்களின் முடிபு.

## மனிதன் குறைபாடுடையவன்:

மனிதன் குறைபாடுடையவன் என்பர். இராமன் மனிதனாக அவதரித்ததால், அவனிடமும் குற்றங்கள் சில உள என்பர் சிலர். சூர்ப்பநகையிடம் பரிகாசம் செய்தது, தாடகையைப் பெண் என்றும் பாராமல் வதைத்தது, மறைந்து நின்று வாலியைக் கொன்றது, சீதையைத் தீக்குளிக்கச் செய்தததும், கானகம் அனுப்பியதும், குற்றங்களே! என்று புலவர்கள் வாதிடுவர்.

இராமன் வினையால் தோன்றிய மனிதன் அல்லன்! அவன் அறததின மூரத்தி, அதனாலேயே இராமனைக் கடவுளாக வழிபடுகிறோம.

## குற்றம்சொல்ல நாம் யார்?

புததாடைககும், பளிச்சோற்றுககும, பொருளுக்கும் ஆசைப் படும் புலவர்கள் அறததை நிலைநிறுத்தவந்த வள்ளலை அம்பலததுககிழுத்துக் குற்றமும் சுமத்தித் தீர்ப்பும் வழங்குகினறனர.

பிற சமயத்தவர்கள் இவ்வாறு செயவரா? இனியேனும், படித்தவரகள் பாதகம செய்யாதொழிக! புண்ணிய மூர்த்தியைத் திறனாய்வு செய்யற்க.

## நாயகன் பதம் பணிவோம்:

நலலொழுககம் வாய்க்கப் பெற்ற இராமன் எந்த நிலையிலும வழுவாது, கோபம் சோகம் இன்னல் ஆகியவற்றை எதிர்கொளளும போதெல்லாம் எவ்வாறு நடந்து கொண்டான என்பதை அறிஞர்கள ஆயவாராக! ஆய்ந்து அறிவு தெளிவாராக!

நடையில் நினறுயர் நாயகனின் காபபியம் மானுடம் உள்ளளவும் வாழும் மானுடம் வெல்ல வழிகாட்டும!

வாழ்க இராம காதை!



# புண்ணியம் செய்வாய்! விதியை வெல்வாய்!

மகாவிஷ்ணு பாற்கடலில் பள்ளிகொண்டு இருக்க, மகாலக்ஷ்மி பரந்தாமனின் பொற்பாதங்களை இதமாக அழுத்திக்கொண்டு இருக்கிறர்.

நாரதர், நாராயணு! நாராயணு! என்ற நாமத்தை ஜெபித்துக்கொண்டே அங்கு வந்தார்.

என்ன நாரதா பூலோகத்தில் எல்லா ஜீவன்களும் சுகமா? என்று வினவினார் மகாலக்ஷ்மி.

படைக்கும் தொழிலை பிரம்மா சரிவர செய்து வருகிறர். அழிக்கும் தொழிலை சிவப்பெருமானும் சரிவர செய்துவருகிறர்.

ஆனால் தங்கள் இதய தெய்வமான மகாவிஷ்ணு மட்டும் காக்கும் தொழிலை சரிவர செய்வதில்லை என்பது பூலோக வாசிகளின் குற்றச்சாட்டு.

பூலோகவாசிகள் எல்லாம் வறுமையில் வாடுகின்றனர். அவர்கள் சகல சௌபாக்யங்களுடன் சுகமாக இருந்தால் தானே, தங்கள் நாயகனை வாழ்த்துவார்கள். இப்போது வறுமையால் வாடிய மக்கள், தங்கள் நாயகனை இகழ்கிறர்கள் தேவி என்று முடித்தார் நாரதமுனிவர்.

தம் பதியை இகழும் பூலோக வாசிகளை வெறுத்தார். ஆனால் நாரதர் கூற்றுப்படி பூலோகவாசிகளை சுகமாக வாழ வைக்க தீர்மானித்தார்.

நாரதர் ஒருவாறு தன் வேலையை முடித்துக் கொண்டு கிளம்பினார்.

எல்லாம் அறிந்த மாதவன் ஒன்றும் அறியாதது போல் மெல்ல எழுந்தார். மகாலக்ஷ்மி கோபத்துடன் எப்போதும் இப்படி தூங்கிக்கொண்டு இருந்தால் காக்கும் தொழிலை செய்துவரும் தாங்கள், எல்லா ஜீவன்களும் பூலோகத்தில் கஷ்டப்படுவது கொண்டு அவர்களை சுகமாக வாழ வைக்காமல், இப்படி மௌனமாக இருப்பது சரியா? என்று கோபித்தாள் மகால்க்ஷ்மி.

மகாலக்ஷ்மி, உன் விருப்பப்படியே செய்கிறேன். கவலைப்படாதே, கோபத்தை விட்டு விடு வா இருவரும் பூலோகம் செல்வோம் என்றர்.

பூலோகத்தில் இருவரும் மனித வேடத்தில் தோன்றினார்கள். மகாவிஷ்ணு பேசினார். மகாலக்ஷ்மி, நீ அவசரப்பட்டு பேசிவிட்டாய்!

மனிதன் செய்த பாவ புண்ணியத்திற்கு ஏற்பதான் சுகமும், துக்கமும் வரும். நீ அதை முதலில் அறிந்துக்கொள். கஷ்டப்படுபவர்கள் எல்லாம் பாவம் செய்தவர்கள். இப்போது கஷ்டத்தை அனுபவிக்கிறர்கள். இவர்களுக்கு சுகப்படும் நேரம் வரவில்லை. விதியை மீறி நாம் செயல்படலாமா? வா, திரும்பி போகலாம் என்றர்.

மகாலக்ஷ்மி விடாபிடியாய் தன் கொள்கையில் இருந்தார்.

மகாவிஷ்ணு ஒரு யோசனை செய்தார்.

மகாலக்ஷ்மி இதோ இந்த கோவில் மண்டபத்தில் நாம் இருப்போம். யாராவது ஒரு மனிதன் வருவான். இதோ என் கையில் இருக்கும் பொற்காசுகள் அடங்கிய பையை இதோ அங்கே போடுகிறேன். அவன் புண்ணியன் செய்தவன் ஆனால் இந்த பொற்காசு பையை எடுத்துக் கொண்டு சுகமாக வாழட்டும். இல்லையேல் அவன் விதிப்படி நடக்கட்டும். அதை நாம் மாற்றகூடாது என்ன சரியா என்று கேட்டார் மகாலக்ஷ்மியிடம் , மகாவிஷ்ணு.

மண்டபத்தில் இருவரும் அமர்ந்தனர். இருவர் நடந்துவந்தனர். மகாவிஷ்ணு அவர்கள் கண்களில் படும்படி பொற்காசு பையை போட்டார். வந்துகொண்டே இருந்த இரு மனிதரில் ஒருவர் பேசினார். குருடன் எப்படி நடப்பான் என்று கேட்டான்.

மற்றெருவன் பேசினான்; நீ என் கையைப் பிடித்துக்கொண்டு என்னை பார்த்துக்கொண்டே நடந்துவா என்றன்.

ஒரு மனிதன் கண்ணை மூடிக்கொண்டு குருடனை போல் நடந்தான். மற்றெரு மனிதன் அவனைப்பார்த்து கொண்டே நடந்தான்.

இருவரும் பொற்காசு பையை கவனிக்காமல் நடந்து சென்று விட்டனர்.

பார்த்தாயா? மகாலக்ஷ்மி. நாம் உதவினாலும் அது அவர்களுக்கு பயன்படாது. புண்ணியம் செய்வதின் மூலம்தான் ஒரு ஜீவன் சுக, துக்கங்களை அனுபவிக்க நேரிடும்.

ஆகவே எல்லாம் விதிப்படித்தான் நடக்கும். வீதியை மீறி ஒன்றும் செய்யமுடியாது. புண்ணியம் செய்வதின் மூலம் விதியை வெல்லட்டும்.

வா, நம் இருப்பிடம் செல்லலாம் என்றர். மகாலக்ஷ்மியும் ஏதும் பேசாமல், தன் நாயகனை நிந்தித்ததற்கு மன்னிப்பு கேட்டு அவர் பின் நாணி மெல்ல நடந்தார்.

தொகுத்தவர் : திரு. எஸ்.எஸ். மணி - சேலம்.

(தொடர் கட்டுரை)

# பகவத் கீதை

## பதினேழாம் அத்தியாயம்

## சிரத்தாத்ரய விபாக யோகம்

உமைப்ரியன்

அர்ச்சுனன் கூறியது

யே சாஸ்த்ர விதிமுத்ஸ்ருஜ்ய
யஜந்தே ச்ரத்தயான்விதா: ।
தேஷாம் நிஷ்டா து கா க்ருஷ்ண
ஸத்வமாஹோ ரஜஸ்தம: ॥ (1)

"கிருஷ்ண, யார் ஒருவர் சாத்திர விதிமுறைகளை மீறி, அதே சமயம் ஆர்முடையவர்களாய் இறைவழிபாடு செய்கின்றூர்களோ அவர்களது நிலை சாத்விகமா? ரஜஸமா? தமஸமா? எத்தகையது?"

[அர்ச்சுனன் ஒரு சாதாரண மனித நிலையில் நின்று சந்தேகம் ஒன்றினை எழுப்பி, அதற்கு இறைவன் மூலம் விடை காண முயலுகின்றுன். வேதங்களின் பால் பெரிதும் ஈடுபாடு கொண்டவர்கள்கூட, சாத்திரங்களில் கூறப்பட்ட விதிமுறைகளை, சமயச் சடங்குகளை சரிவர மேற்கொண்டாலும், அவற்றிற்கு ஏற்ப நடந்து கொள்வதில்லை. சொல்வேறு, செயல் வேறு, எண்ணம் வேறு என்று நடந்து கொள்வதால் அவர்கள் ஒரு போலியான சமயவாதிகளே ஆவர். ஆனால் சாதாரண மனிதர்கள் பலரும் சாத்திரங்களில் கூறப்பட்ட அறவுரைகளை, நியதிகளை அறியாவிட்டாலும், மனதில் பக்தி என்ற உணர்வின் உந்துதலினால் நாளும் இறைவழிபாட்டை மேற்கொள்கின்றனர். இதுபோது அப்பக்தனின் சிரத்தை, பூரண நம்பிக்கை, அக்கறை தெரியவரும். நாளும் காலை நாலாயிரம் பாடினாலும், தேவாரம் இசைத்தாலும் மேற்கூறிய மூன்று பண்புகள் இல்லாவிடின், அவர்கள் போலியான ஒரு வாழ்க்கையே மேற்கொண்டவராவர். ஆகவே சாத்திர அறிவு இன்றி, மேற்கூறிய மூன்று பண்புகளுடன் ஒருவன் இறைவனை வழிபட்டால் அவன் தன் வாழ்க்கையில்



மேன்மை அடைகின்றுனா? இல்லையெனின் இடையிலேயே நின்று விடுகின்றுனா? அல்லது சாததிர அறிவு இல்லையாதலால் கீழான நிலையை அடைகின்றுனா? அதாவது சாததிர அறிவு இல்லாத இறை வழிபாடு ஒருவனுக்கு சத்துவ அல்லது ரஜோ அல்லது தமோ குணபயன்களைத் தந்திடுமா என்பது அர்ச்சுனனின் கேள்வியாகும்.]

## கிருஷ்ணபகவான் கூறியது

*த்ரிவிதா பவதி ச்ரத்தா*
*தேஹினாம் ஸா ஸ்வபாவஜா ।*
*ஸாத்விகீ ராஜஸீ சைவ தாமஸீ*
*சேதி தாம் ச்ருணு ॥ (2)*

"தேகிகளிடம் (உடலோடு கூடிய உயிர்களிடம) இயல்பாக அமைந்துள்ள சிரத்தையே (ஈடுபாடே) சாத்வீகம், ராஜஸம் மறறும தாமஸம் என்று மூன்று வகையாக உள்ளது. அதனைக் கேட்பாயாக."

[தேகம் (உடல்) தன்னுள்ளே உயிரைக் கொண்டுள்ளதால், அத்தேகம் தேகி என்று அழைக்கப்பெறுகிறது. மரணம் அடைந்த உயிர்க்கு அதன் முன்வினைப் பயன்களுக்கேற்ப அடுத்தப்பிறவி என்று உள்ளது என்பது இந்து சமயத்தின் பெரு நம்பிக்கையாகும். அவ்வகையிலே, இப்பிறவியில் மனிதப்பிறவியாக எடுக்கும் உயிரானது முற்பிறவியில் அது மேற்கொண்ட வினைகளின் தொடர்பினால் அவற்றின் இயல்பு, தன்மை, ஆகியவற்றை இப்போதும பெறுகின்றது. அந்த குண இயல்புகளே ரஜோ, தமோ, சத்துவ குணங்களாகப் பகுக்கப்பெறுகின்றன.]

*ஸத்வானுரூபா ஸர்வஸ்ய*
*ச்ரத்தா பவதி பாரத*
*ச்ரத்தாமயோ அயம் புருஷோ*
*யோ யச்ச்ரத்த: ஸ ஏவ ஸ: ॥ (3)*

"பார்த்தா!(அர்ச்சுனா) ஒவ்வொருவரின் மன இயல்புகளுக்கேற்ப அவர்களது ஈடுபாடு (சிரத்தை) அமைநதிடும். மனிதன் எதிலும் (இயற்கையாகவே) ஈடுபாடு உடையவன். அவனது ஈடுபாடே அவனாக விளங்குகிறது."

[ஈடுபாடு எனும் இயல்பு ஒவ்வொரு உயிருள்ள உடலிலும் உள்ளது. அதுவும் மனிதனிடம் அவன் சித்திக்கத் தெரிந்தவனாதலால் அந்த ஈடுபாடு எனும் உணர்வு என்றும் அதிகமாகவே அமைந்திடும். சிந்தனையும், மன உணர்வும் என்றும் விழிப்புடன் இருத்தல், வினையாற்றிட வேண்டும் என்ற உள்ளத்துடிபபு, அவ்வாறு வினையாற்றிடும் போது எழும் மகிழ்சசி, நாம் நினைத்திடும் பணி, எண்ணம் நிறைவேறிவிடும் என்ற நம்பிக்கை ஆகியன ஒன்று சேர்தலே ஈடுபாடு என்பது ஆகும். மனிதன் ஈடுபாடு கொள்ளுமஅளவு அவனது இயல்பு, அவன் அடைநதிடும் வெற்றி ஆகியனவற்றை அறிந்து கொள்ளலாம். மனிதனின் ஈடுபாடு உயர்ந்ததாக அமைந்திடும் போது அவன் மேன்மையுறுகின்றுன். கீழானவற்றில் அவன் மனமும், சிந்தனையும் ஈடுபடும்போது அவன் அழிவை அவனே தேடிச்செல்கிறுன.]

*யஜந்தே ஸாத்விகா தேவான்*
*யக்ஷரக்ஷாம்ஸி ராஜஸா: ।*
*ப்ரேதான் பூதகணுன்ஸ்சான்யே*
*யஜந்தே தாமஸா ஜனா: ॥ (4)*

"சாத்விக குண இயல்புகளுடன் ஈடுபாடு கொண்டவர்கள் கடவுளர்களை வணங்குவார்கள்; ரஜோ குணத்தில் ஈடுபாடு உள்ளவர்கள் யக்ஷர்கள் மற்றும் ராக்ஷசர்களை வணங்குவர்; தாமஸ குண இயல்புகளின்பால் ஈடுபாடு மிக்கவர்கள் ஆவிகளை, பூத கணங்களை பூஜை செய்வார்கள்."

[சாத்துவீகம் என்பது மேன்மைக்கும இட்டுச் செல்லும் குண இயல்புகளைக் கொண்டது. இக்குணம் கொண்டவர்களது சொல், செயல், எண்ணம், மட்டுமின்றி உடலும் தூய்மையானவற்றையே நாடும். தூய்மையாகவே இருக்கும். பொது நலம் நாடும் இவர்கள் கடவுளர்களை எப்போதும் வணங்குவர். அறிவு மேம்பட்டிருக்கும். ஞானத்தின் கண் நாட்டம் பெரிதும் இருக்கும். ஆகவே பயன் கருதாது, பெரிய கடவுளர்களாகப் போற்றி வணங்கப்படும் விஷ்ணு, சிவன் என்று அவர்களையே நாளும் வழிபடுவர். அடுத்துவரும் குணமான ராஜஸ பிரிவினர் தங்கள் சுயநலம் காரணமாக, தங்களை மட்டுமே மனதிற்கொண்டு பதவி, புகழ், பொருள் எனும் உலகாயுத ஆதாயங்களுக்காக சிறு சிறு ஆற்றல்களை தந்திடும் சிறு தெய்வங்களை வணங்குவர. அடுத்து மூன்றுவதாக தாமஸ குணத்தவர் தங்கள் சுயலாபங்களுக்காக மற்றவர் அழிவைப்பற்றியும் கவலைப்படார். பிறர் துன்பங்களின் வழியில் தங்கள் மகிழ்ச்சியை எதிர்பாரப்பர். தூய்மையற்ற மனமும், சிந்தனையும் கொண்ட இவர்கள் அற்பு சுகங்களுக்காக ஆவிகளை, தீய தேவதைகளை பூத கணங்களை அச்சமதரும் சூழ் நிலையில் வைத்து வணங்கி மகிழ்வர்.]

அசாஸ்த்ரவிஹிதம் கோரம்
தப்யந்தே யோ தபோ ஜனா: ।
தம்பாஹங்காரஸம்யுக்தா:
காமராகபலான்விதா: ॥ (5)

கர்ஷயந்த: சரீரஸ்தம்
பூதக்ராமமசேதஸ: ।
மாம் சைவாந்த: சரீரஸ்தம் தான்
வித்யாஸுரநிஸ்சயான் ॥ (6)

"வீண் பகட்டும், மமதையும் உடையவர்களாய், காமமும் மற்றும் மிக்கப் பெற்றவர்களாய் விளங்கி யார் ஒருவர் தங்கள் உடலையும், அவ்வுடல் பெற்றுள்ள ஐம்பொறிகளையும் அவர்கள்தம் உள்ளத்தில் உறையும் என்னையும் பலவாறு துன்புறுத்தி, சாத்திரங்கள் கூறாத கடுமையான தவத்தை மேற்கொள்கிறார்களோ அவர்கள் அசுரத் தன்மை கொண்ட வழிமுறைகளை மேற்கொள்வர் என்பதை அறிவாயாக!"

[மேற்குறிப்பிட்ட இரண்டு செய்யுட்களிலும் இந்து சமயத்தின் பெருமை கோடிட்டுக் காண்பிக்கப்படுகின்றது. சிலர் சமயப் பண்டிகைகளின்போது நெருப்பில் நடந்தும், உதட்டிலும், நாக்கிலும், கன்னத்திலும் கம்பியைச் செருகிக்கொண்டும், ஆணித்தரையில் படுத்தும் 'சாகசங்கள்' என்ற பெயரில் தங்களை விளம்பரப்படுத்திக்கொள்கின்றனர். இதனைப் பார்த்து பகுத்தறிவாளர்கள் இந்து சமயம் மூடநம்பிக்கைகளின் உறைவிடம் என்று கூக்குரலிட்டு தங்களுக்கு விளம்பரம் தேடிக்கொள்கின்றனர். ஆனால், இந்த இரண்டு செய்யுட்களிலும் பகவான் நேரிடையாக இத்தகுச் செயல்களைக் கண்டித்துள்ளது நமது சமயத்தின் 'சாத்துவிக' பண்பு தெரியச் செய்துள்ளது. 'தான்' என்னும் மமதையால், 'தனது' என்ற அகங்காரத்தில் தங்கள் உடலை வருத்திக்கொண்டு, சுய விளம்பரம் செய்துகொள்கின்றனர். அல்லது மனப்பக்குவமின்மை காரணமாக நரம்பு வீரிய தளர்ச்சியினாலும் பிறரின் தூண்டுதலின் பேரிலும் தங்கள் உடலினை, சமயத்தின் பெயரால் பலவாறு வருத்தி, பிறர்க்கும் தனக்கும் துன்பத்தையே தருகின்றனர். இத்தகு மனப்போக்குமிக்கவர்களுக்கு காமமும், பதவி, புகழ்மேல் கொண்ட பற்றுதல்களே துணைபோகின்றன. இத்தகையோரால் இறைவன் மகிழ்ச்சி அடைவதில்லை. இவர்கள் இறைவனைப் பொறுத்தவரை சமுதாயத்தை அழித்திடும் வேர்ப்பூச்சிகளே ஆவர். இவர்களது வழிமுறைகளை, என்றுமே இந்து சமய சாத்திரங்கள் புகழ்ந்ததில்லை. ஏற்றுக்கொண்டதில்லை. சாத்திரங்களை மீறி நடந்திடும் இவர்கள் அரக்கர்களே ஆவர்.]

ஆஹாரஸ்த்வபி ஸர்வஸ்ய
த்ரிவிதோ பவதி ப்ரிய: ।
யக்ஞஸ்தபஸ்ததா தானம்
தேஷாம் பேதமிமம் ச்ருணு ॥ (7)

"ஒவ்வொருவர் மேற்கொள்ளும் உணவு வகைகளில் கூட மூன்று வகை உள்ளன. அவ்வாறே வேள்வி (யாகம்), தவம், தானம் ஆகியவனவும் மூன்றுவகையாக உள்ளன. அந்த வேற்றுமைகளை கேட்பாயாக."

[முன்பு கூறியபடி மூன்று குண இயல்புகொண்டவர்களுக்கு ஈடுபாடு என்பது எவ்வாறு வேறுபடுகிறதோ, அதே போன்று சத்துவ, ரஜோ, தமஸ குண இயல்புகொண்டவரக்ளுக்கென்று உணவு வகைகளும் மாறுபடுகின்றன. அது மட்டுமின்றி அவர்களுக்கென்று வேள்வி, தவம், தானம் வகைகள் கூட மாறுபடுகின்றன.]

ஆயு: ஸத்வபலாரோக்ய ஸுக
ப்ரீதி விவாதனா: ।
ரஸ்யா: ஸ்நிக்தா: ஸ்திரா
ஹ்ருத்யா ஆஹாரா:
ஸாத்விக ப்ரியா: ॥ (8)

"நீண்ட ஆயுள், அறிவு, வலிமை உடல்நலம், சுகம், சுவை ஆகியனவற்றை வளர்ப்பவைகள் சாறு உள்ளவைகள், பசை உள்ளவைகள் (மிருதுவானவைகள) வலிமை தருபவைகள் இன்பம் தருபவைகள் ஆகிய உணவு வகைகளையே சாதவீக குணத்தோர் விரும்பி உண்பர்."

[சத்துள்ள உணவே சாத்வீக குணத்தை வளர்த்திடும். மிருகங்களில் அவற்றின் மிருக நிலையிலே எண்ணிப்பார்த்திடும் போது பசு, ஆடு, யானை போன்றன சாத்வீகம் கொண்டன என்றே துணிந்து கூறலாம். வெறும் தாவர இன உணவினையே உட்கொள்ளும் அவற்றிடையே நிலவும் வலிமை, பயன் ஆகியவையே அவை உட்கொள்ளும் உணவின் சிறப்பினைக் கூறும். விரைவில் ஜீரணமாகி ப்சியை உண்டாக்கிடும் உணவு, அதிக நேரம் வயிற்றில் இருந்து, உடல் சக்தியை உண்டாக்கிடும் உணவு ஒருவனது ஆயுளை நீடிக்கச் செய்யும் பெருமை கொண்டன. சாறு அதிகமுள்ளபழ வகைகள், மாவு பகுதி அதிகமுள்ள பழங்கள், உணர்ச்சியைத் தூண்டாத அரிசி, பருப்பு போன்ற தானியங்கள் ஒருவனது அறிவை, உடல் நலத்தை, வளர்த்திடும் ஆற்றல் வாய்ந்தன. மா, பலா, போன்ற கனிகள் இனிமை

கொண்டு, பெயர் கூறியவுடன் சுவைத்துட பார்க்கத் தூண்டும் பழங்கள் இரத்தச சேர்க்கையை அதிகரிக்கும். இவையாவும இயற்கை நமக்குத் தந்திட்ட சாத்துவிக உணவு வகைகளாகும்.]

கட்வம்ல வணுத்யுஷ்ண
தீக்ஷ்ண ரூக்ஷ விதாஹின: |
ஆஹாரா ராஜஸஸ்ய யேஷ்டா
து:கசோகாமயப்ரதா: || (9)

"கசப்பு, புளிப்பு, உவர்ப்பு, சூடு மிக்கன, காரம், வறட்சி, எரிச்சல் தருபவை, துன்பம், துயரம், நோய் ஆகியனவற்றைத் தருபவன ஆகிய உணவு வகைகள் ரஜோ குணத்தாருக்குப் பெரும் விருப்பமானவையாகும்.

[ரஜோ குணத்தவர்களே நம்மில் அதிகம் உள்ளவர்கள். யாரிடம் அதிகமான வியாதிகள் உள்ளதோ, அவர்கள் ரஜோ குணத்தவர் என்று கூறிவிடலாம். ஒருவனுடைய வாழ்க்கையில் 'உணவு' பெரிதும் அங்கம் வகிக்கின்றது. எப்போது மனிதன் 'நெருப்பின்' ஆற்றலை அறிந்து கொண்டானோ, அதன் ஆற்றலை தன் உணவுக்குப் பயன்படுத்திக்கொண்டு, இறுதியில் மனிதன் நாக்குக்கு அடிமையாகிவிட்டான். அதனால் உண்ணும் உணவிற்கேற்ப அவன் செயல்பட ஆரம்பித்துவிட்டான். மேலும் அளவுக்குமீறி ரஜோ குணத்தார் இவ்வுணவு வகைகளை சுவைத்திட ஆரம்பித்ததால் விரைவில் உணர்ச்சிகளுக்கு அடிமையாகி விடுகின்றனர். இதனால் அவன் அறிவை முந்தி சொல் வெளிவந்து விடுகின்றது. சொல்லை முந்தி செயல் வெளிப்பட்டு விடுகிறது. அதாவது அவன் கட்டுப்பாட்டுக்குள் இருப்பதில்லை. உணர்ச்சி மயமான ஒரு உயிராகத் திகழ்கின்றான். காரம் அதிகமுள்ளவர்கள் கோபத்திற்கு அடிமையாகிவிடுகின்றனர். புளிப்பு, உவர்ப்பு, சூடுமிக்க உணவு போன்றவற்றை அதிகமாக உட்கொள்பவர்கள் பலவகையான நோய்களுக்கு அடிமையாகிவிடுகின்றனர். சாதாரணமாக நுணுகிப்பார்த்தால் ரஜோ குணத்தார் நாடிடும் மேற்கூறிய உணவு வகைகள் மிருகங்கள் கூட பெரிதும் விரும்புவதில்லை.]

யாதமாமம் கதரஸம் பூதி
பர்யுஷிதம் ச யத் |
உச்சிஷ்டமபி சாமேத்யம் போஜனம்
தாமஸப்ரியம் || (10)

"யாமம் கழிந்த, ருசியற்ற, துர்நாற்றம் கொண்ட, பழைய, எச்சிற்படுத்தப்பட்ட, தூய்மையற்ற உணவினையே தமோ குணத்தார் விரும்பி உண்பர்"

[தமோ குணத்தினர் என்றால் ஏதோ சேரிவாழ் மக்கள் என்று எண்ணுவது தவறு. இக்குணம் கொண்டோர் எல்லா நிலை மக்களிடையேயும் உள்ளனர். பொதுவாக மேற்கூறிய உணவு வகைகளை உண்போர் அறிவுமந்தமாக உட்றகோளாறுகளின் இருப்பிடமாக விளங்குபவர். அதிக சூடோ அல்லது அதிக குளிர்ந்தோ உள்ள உணவு வகைகள் உடலின் ஜீரணப்பகுதிகள், வாயின் உட்பகுதிகள் ஆகியவற்றிற்குக் கெடுதல் செய்திடும். ஆகவே சமைத்த ஒன்று இரண்டு மணி நேரத்திற்குள் உணவு உட்கொள்ளுதல் விரைவான செரிமானத் தன்மையை உடல் அளித்திடும். சமைத்த உணவிற்கே இத்தகு முன்எச்சரிக்கை வேண்டுமென்றால், கடினமான உணவான இறைச்சி, துர்நாற்றம் அளித்திடும் மீன் உணவு வகைகள் ஆகியவற்றை உட்கொள்ளுவதற்கு ஒருவர் எடுத்துக்கொள்ள வேண்டிய எச்சரிக்கைகள் எவவளவு என்பதை அறிதல் அவசியம். உடல் வலிமைக்கும், உள்ள ஆற்றலுக்கும், அறிவு மேம்பாட்டிற்கும் தேவையான 'சக்தி'யினை தாவர வகைகளே அளித்திடும்போது உடல் உட்பகுதிகளுக்கு தீங்கிழைத்திடும் அசைவ உணவு வகைகளைத் தவிர்த்தலே நலம் தரும்.]

(தொடரும்)

## விண்ணப்பம்

திருப்பதியிலுள்ள திருமலை திருப்பதி தேவஸ்தானத்தின் தங்கு வசதிகளுக்காக முன்கூட்டியே செய்து கொள்ளும் இட ஒதுக்கீடுகளுக்கான தொகையினை எம்.ஓ. மூலம் அனுப்புதலைவிட அத்தொகைக்கான வங்கி காசோலையை 'உதவி செயலாட்சிச் தலைவர் (வரவேற்பு) தி.தி. தேவஸ்தானம், திருப்பதி' அல்லது 'செயலாட்சித் தலைவர், தி.தி. தேவஸ்தானம், திருப்பதி' எனும் பெயரில் எடுக்கப்பட்டு, வருகை புரியும் நாள், வரும் நபர்களின் எண்ணிக்கை ஆகியவை கொண்ட முழுத்தகவல்களுடன் கூடிய கடிதத்துடன் (ஆங்கிலத்தில்) அனுப்புதல் விரைவான பயனைத்தரும்.

செயலாட்சித் தலைவர்,
தி.தி. தேவஸ்தானம், திருப்பதி.

# ராம நாமம் சொன்னால்....?

எல்லாம் வல்ல கடவுள், பலவிதமான வடிவங்கள், அவ்தாரங்கள் எடுக்கிறுர், தர்மத்தைக் காப்பாற்றவும், தன்னை அடைக்கலமாகக் கொள்ளும் பக்தர்களைக் காப்பாற்றவும்.

கடவுளின் அடியவர்ளுக்குத் தொல்லை தருபவர்களும், அதர்மவழியில் செல்பவர்களும் அவரால் அழித்தொழிக்கப்படுகின்றனர். விண்ணுலகிலிருந்து மண்ணுக்கு இவற்றிற்காகவே அவர் அடிக்கடி வருகிறுர். உடன் முளைக்கும் களையைப் பிடுங்கி எறிந்தால்தானே பயிர் நன்ருக வளரும்?

தர்மமும், அதர்மமும் அவற்றைச் செய்யும் மக்களின் குணத்தால் பலம் பெறுகின்றன. "நல்லவர்களைக் காக்கவும், கெட்டவர்களை அழிக்கவும், தர்மத்தை நிலைநிறுத்தவும் நான்குயுகங்கள் தோறும் அவதரிக்கிறேன்" என்று கிருஷ்ணனாக அவதரித்த கடவுள் கூறுகிறுர்.

தியாகம் செய்தல், தவம் செய்தல், தியானம் செய்தல் என்று யுகத்திற்கு யுகம் கடவுளை உணரும் வழிகள் மாறுபடுகின்றன. கடந்த யுகங்களில் இவ்வொழுக்கங்கள் மிகக் கடுமையாகப் பின்பற்றப்பட்டன. இந்தக் கலியுகத்தில் கடவுளின் பலவிதமான திருநாமங்களை அடிக்கடி சொல்வதே சிறந்த பக்தி (நாம சங்கீர்த்தனம்) என்று வலியுறுத்தப்படுகிறது.

இது மிகவும் எளிமையானதும், மிகுந்த பயன் உள்ளதுமாகும்.

கடவுளை நினைவுகொள்ளச் சிறந்த வழி எது? என்று ஒருமுறை அன்னை பார்வதி, சிவபெருமானைக் கேட்டாள். கடவுளின் ஆயிரத்தெட்டு திருநாமங்களை எடுத்துச் சொல்வதே (விஷ்ணு சஹஸ்ரநாமம்) மிகவும் சிறந்தவழி என்று சிவபெருமான் விடையிறுத்தார்.

கடவுளின் பலநாமங்களில் ராமநாமம், மற்ற யாவற்றிலும் சிறந்ததாக மதிக்கப்படுகிறது. இது கடவுளின் ஒருபெயர் மட்டுமல்ல, பிணிநீக்கும் மந்திரமும் ஆகும். ராமநாமம் தொடர்ந்து சொல்லி வருபவர்களுக்கு இம்மையில் நிறைய மகிழ்ச்சி கிடைப்பதுடன் பிறவிப்பிணியிலிருந்தும் விடுதலை கிடைக்கிறது.

இராமாயணமும், மகாபாரதமும், இதிகாசங்கள் என்று சொல்லப்பட்டாலும், அவை வேதங்களாகக் கருதப்படுகின்றன. இராமாயணத்தை 24 ஆயிரம் நூற்பாக்களில் (சுலோகங்களில்) வால்மீகி இயற்றினார். அதில் 24 நூற்பாக்களில் காயத்ரீ மந்திரத்தையும் இயற்றியுள்ளார். வேத வியாசர் என்று போற்றப்படும் மகா முனிவர் பாடிய மகாபாரதம் ஐந்தாவது வேதம் என்று போற்றப்படுகிறது.

வால்மீகி ராமாயணம் ஸ்ரீராமனை, மிகச் சிறந்த குணங்கள் கொண்ட மனிதனாக , புருஷோத்தமனாக உருவகிக்கிறது. "எல்லாம் அறிந்த நாரதரே! உலகில் இதுவரை தோன்றியுள்ள மிகச் சிறந்த கதைத்தலைவன் யார்? அவன் மிகுந்த அறிவும், நிறைந்த நல்ல குணங்களும் கொண்டவனாக இருக்க வேண்டும். அவன் யாரென்ற உம்மால் சொல்ல இயலுமா?" இப்படி வால்மீகி, நாரதரிடம் வினவினார்.

நாரதர் அதற்கு இப்படி பதிலளித்தார்.

"நீங்கள் கேட்ட அனைத்து குணங்களும் பொருந்திய ஆண்மகன் சூரிய குலத்தில் உதித்து, இப்போது அயோத்தியில் ஆண்டுகொண்டு இருக்கிறுன். அவன்தான் ஸ்ரீராமன்!"

பிற்காலத்தில் கவிச்சக்ரவர்த்தி கம்பரும், துளசிதாசரும் மாந்தருக்குள் தோன்றிய மாமணியான ராமனை கடவுளின் அவதாரமாகத் தமது காவியங்களில் போற்றி மகிழுகின்றனர்.

தொகுத்தவர் : திரு. சக்திக்கொடி சேலம்.

# ஸ்ரீராமநாமத்தின் மகிமை

திரு. கே.ஏ. பார்த்தசாரதி - சென்னை.

ஆதி கவி வால்மீகி நாரதரை பார்த்து பதினாறு கலைகள் (குணங்கள்) நிரம்பிய புருஷோத்தமனை நான் அறிய விரும்புகிறேன் என்று கேட்க, அதற்கு பதிலாக நாரதர் "இக்ஷ்வாகு குலத்தில் தோன்றிய ஸ்ரீராமபிரான்" என்று பதில் தெரிவிப்பதாக முதல் ஸர்க்கம் தொடங்குகிறது. அதனைத் தொடர்ந்து, இந்திராதி தேவர்கள் தாம் அனைவரும் இராவணனால் பல துன்பங்களுக்கு, கஷ்டங்களுக்கு ஆளாவதாகவும் அதற்கு வேண்டிய நிவர்த்தியை செய்யும்படி பிரம்மனிடம் வேண்டுதல் செய்கின்றனர். இராவணன் கைலாச மலையை ஆட்டியதால் சிவன் கொண்டிருந்த அச்சத்தையும், அவமானத்தையும் தாங்கமுடியாமல் தானும் பிரம்மனிடம் செல்கிறார். பிரம்மா, சிவன் மற்றும் இந்திராதி தேவர்கள் எல்லாம் ஒன்று சேர்ந்து திருமாலிடம் தங்களுடைய பிரார்த்தனையை தெரிவித்ததாகவும், அந்த பிரார்த்தனையை ஏற்று திருமால் அவர்களுக்கு அபயம் அளிப்பதாக தெரிவித்து, தானே தசரத சக்ரவர்த்திக்கு மகனாக ஸ்ரீராமபிரான் அவதரித்தார்.



திருமால தான் அவதரித்து தேவர்களுக்கு இராவணனால் ஏற்படக்கூடிய கஷ்டங்களை நிவர்த்தி செய்வதாக, தெரிவித்தவுடன், பிரமன் தேவர்களைப் பார்த்து, பகவானுக்கு உதவும் வகையில் நீங்களும், பலமான குரங்குகளாகவும் கரடிகளாகவும் பூமியில் வாலி, ஸுக்ரீவன் அனுமன், ஜாம்பவான் போன்று பலவிதமாக தெய்வாம்சம் பெற்று பூமியில் வந்து தோன்றினர். உருத்திரனான சிவன் அஸுரர்களிடம் பக்ஷபாதியாகி தான் யாரையும் சிருஷ்டி செய்ததாக தெரியவில்லை. இதனாலேயே இராவணன் சிறந்த சிவபக்தனாக தெரிவிக்கப்படுகிறான். இதர தேவதைகள் உதவியதுபோல் சிவபிரான் ஸ்ரீராமனுக்கு எந்தவிதமான உதவியும் செய்யவில்லை என்பது ராமாயண சரித்திரத்தின் மூலம் தெரியவருகிறது.

"ப்ரேத்ய மானே ஜகந்நாதம்
ஸர்வலோக நமஸ்கிருதம்
கௌசல்யா(அ)ஜநயத்ராமம்
ஸர்வலக்ஷண ஸம்யுதம்
விஷ்ணோர்ரர்த்தம் மஹாபாகம் புத்ரம்
ஜக்ஷ்வாகு வர்த்தனம்
கௌசல்யா ஸு ஸுபேதேன
புத்ரேணமித தேஜஸா
யதாவரேண தேவாநாமதிதிர்
வஜ்ரபாணிகர்"

என்ற ஸ்லோகத்தில் கண்டபடி ஸ்ரீராமபிரானுடைய பிறப்பு திருமாலின் அவதாரமாகவே கொள்ளப்படுகிறது.

ஸ்ரீவால்மீகியை அடி ஒற்றியே கம்பர் "சுராமலை யத்தனர் கைக்கரிஎய்த்தே அராவணையிற்றுயில் வோகுய்ன அந்நாள் வினவியளித்தருள் மெய்ப்பொருளுக்கே இராமனெனப் பெயரீந்தனன் அன்றே" என்று தொடங்கி தசரதன் பெற்ற நான்கு குமாரர்களுக்கும் பெயரிட்டதாக பாடல்கள் அமைந்திருக்கிறது.

வால்மீகியோ அல்லது கம்பரோ "இராமன்" என்று பெயரிட்டதற்கு அடிப்படைக்கார

ணம் ஏதும் மூலநூல்களில் குறிப்பிடவில்லை என்பது குறிப்பிடத்தக்கது.

ஸ்ரீராமபட்டாபிஷேகத்தை சித்திரவடிவில் அட்டைப்படமாக தாங்கி ஸ்ரீராமன் புகழ் பாடுவதாக அமைந்த பல கட்டுரைகளுடன் 'ஸப்தகிரி' ஏப்ரல் 97 மாத இதழ் ஆன்மீக பிரசாரம் என்ற நோக்கில் வரவேற்கப்படும் முரண்பாடான பல கருத்துக்கள் வெளியாகி இருப்பது பரிதாபத்திற்கு உரியது.

"வேதம் நான்கினும் மெய்பொருள்
ஆவது நாதன் நாமம்
நமச்சிவாயமே"

என்று எடுத்துககாட்டி 'நமச்சிவாய' மகரத்தில் உயிரோட்டமான எழுத்து 'ம' என்றும் இதனை தொடர்ந்து "நாராயண" நாமத்தில் உயிரோட்டமான எழுத்து 'ரா' என்றும் சொல்லி, இந்த 'ரா'வுடன் நமச்சிவாய சப்தத்தில் காணப்படும் 'ம' எழுத்தை சேர்த்து "ராம" நாமம் மேலான மந்திரம் என்று தெரிவிக்கிறுர் ஒரு கட்டுரையாளர். வடமொழி 'நாராயண' நாமத்திலும தென்மொழி 'நமசசிவாய' நாமத்திலும் எழுத்துக்களை தனிததனியாக எடுத்து மீண்டும அவற்றை ஒடடுவேலை செய்வதற்கு இவர்யார்? சைவ வைணவ ஒருமைப்பாட்டுடன் வடமொழி தென்மொழி ஒருமைப்பாடும் இதுபோன்ற மனம் போன போக்கில் திரித்துக்காடடும் போக்கு வெறுத்து ஒதுக்கப்படவேண்டியது.

இதே விஷயம் மற்றெரு வடிவில் காணப்படுகிறது. திருவெட்டெழுத்து "ஓம் நமோ நாராயணுய அதுபோல் சிவ பஞ்சாட்சரம் "ஓம் நமசிவாய: இவை இரண்டையும் வடமொழி சொல்லாகவே கொண்டால் இரண்டிலும் "ஓம்நம" என்ற பகுதி வணக்கத்திற்கு உறிய சொற்கள் அதனை அடுத்து நாராயண நாமத்திலிருந்து "ரா" என்ற எழுத்தை எடுக்கும்போது பஞ்சாட்சரத்திலிருந்து வணக்கத்திற்கு உறிய நம: சப்ததிலிருந்து 'ம' என்ற எழுத்தை எடுப்பது மீண்டும் அவற்றை ஒரு சொல்லாக ஒட்டுவது என்பது மடமை என்று எடுத்துக்காட்டப்படுகிறது.

பிரம்மருத்ர இந்திராதி தேவர்கள் பிரார்த்தித்தபடி திருமால் தானே ஸ்ரீராமபிரானாக அவதரித்தான் என்று மூல நூல்கள் மூலமாக தெளிவாக அமைந்த பின் சைவ வைணவ வேறுபாடு எங்கிருந்து வந்தது சைவர்கள் ஏன் பேதம் பாராட்ட வேண்டும?

'சிவவாக்கியர்' ஸ்ரீவைஷ்ணவராக மாறியபின் ஸ்ரீராமபிரானை பரவலாக போற்றுகிறுர் என்பது மற்றுமோர் மடமை. இவர் எடுத்துகாட்டும் மேறகோள் சித்தர் பாடல்களில் காணப்படுவது. இந்தப்பாடல் சித்தரான நிலையில் பாடப்படடதா அலலது வைஷ்ணவராக (திருமழிசையாழ்வாராக) மாறியபின் பாடியதா? ஒன்றிறகு ஒன்று முரண்படுகிறது சித்தர் காலமும் ஆழ்வார் காலமும் வேறுபட்டது என்பது சில ஆராய்சசியாளர்களுடைய முடிவு.

"ராம" நாமம் தொன்மையானது பரபபிரம்மம். அநாதி ராமநாமமும் அநாதி என்று மனம் இசைந்தவர் அநத அநாதியான பரம்பொருளுக்கு பெயர் காரணத்தை ஆராயந்து பெயர்களுக்கு எழுத்துக்களை தனித்தனியாக எடுத்து, கூட்டி, திரித்து பொருள் காண்பதற்கு முன்வருவது ஒரு புரியாத புதிர்.

ஸ்ரீராமபிரானுக்கு பெயர் சூட்டிய பாடலில் "கராமலை" என்று தொடங்கும் பாடலில் "கராமலை" என்று தொடங்கும் பாடல் ஏற்கெனவே எடுத்துக் காட்டப்பட்டது - திருமாலுக்கே தனித்தன்மை வாய்ந்த கஜேந்திர மோக்ஷம் மற்றும் பாற்கடலில் அநந்தன் மேல் சயனித்திருப்பது ஆகிய லக்ஷணங்களை தெரிவித்து அந்த பரம்பொருளே ராமனாக அவதரித்தான் என்றுர் கம்பர். "திகாசினி மூவரும் அல்லன்" என்ற பாசுரத்தை எடுத்துகாட்டி திருமால் இராமனாக வந்தவன் அல்லன் என்று முடிவு காண்பது மூலநூல்களுக்கு முரண்பட்டது. என்பதை இவர்கள் ஏன ஏற்க மறுக்கின்றனர்.

"395 இடங்களில் சிவபெருமானைப பற்றி குறிப்படுகிறுர் கம்பர்" என்று தெரிவிக்க முன் வந்தவர் - மூம்மூரததிகளுக்கும் மேலான பரம்பொருள் சிவன் தான் எனறு கம்பர் பரம்பொருளுக்கு விளககம் அளித்ததாக எடுத்துக்காட்ட ஏன் மறநது விட்டார்.

கம்பர் தமது நூலின் தொடககத்திலேயே தான வடமொழியில அமைநத 'வால்மீகியை' முதல் நூலாக கொணடு "தமிழில கவிசெய்தான" என்று தெரிவிக்கிறுர. "நாரணன விளையாட்டெல்லாம்...." என்று தொடங்கும் பாடல்மூலமாக.

வாலமீகி தெரிவிக்காத விஷயமாக தமது காப்பு செய்யுளில "குறுகைநாதன் குறை கழலை" பிரார்ததித்தே தமது நூலை தொடர்கிறுர். மேலும கோசல நாட்டு வாணஸு

யான பாடல் ஒன்றில் "வாங் கரும் பாதம் நான்கும் வகுத்த வால்மீகி என்பான்" என்று தெரி விபபதன் மூலம் தாம் முதல் நூலாக கொண்டது வால்மீ கியை என்று தெளிவாக விளக் கம் கொடுத்திருக்கிறுர்.

பிரம்மாதி தேவர்களுடன் சிவ பிரானும் திருமால் திருவடிக ளில் பிராத்தித்ததாகவும் அவர் களுக்கு அபயம் அளிக்க முன் வந்த திருமால்களுடன் மேல் தோன்றினான் என்று இரண்டு இடஙகளில் திருமாலின் கருட வாகன சேவை கம்பரால் பாடப் பட்டிருப்பதை கண்கொண்டு காணவேண்டும்.

திருமால் இருக்கும் இடங் களில எல்லாம் விட்டுப்பிரி யாது உடன் இருப்பதாக அநந் தன கருடன் சேனை முதலி யார எனற அமைப்பு வைண வம் தவற இதர மதங்களில் ஏறகப்படவில்லை. இவர்களுக்கு வைணவ மதத்தில் நித்ய ஸூரி கள் என்று பெயர் அமைந்தி ருக்கிறது. கம்பர் தெரிவிக்கும் "விததக முனிவர்களும் விண் உளோர்களும் நித்தரும்" என்று குறிபபிடப்படும் நித்தர் என்ற சொல் நித்ய ஸூரிகளை குறிப் பிடுவது என்பதை மறுக்கமுடி யுமா. நவீன ஆராய்ச்சியா ளர்கள் கம்பரை மற்றும் சமய ஆராய்ச்சியைவிட்டு அவருக்கு மூலநூல் ஆக அமைந்த வால் மீகி பற்றி சமய ஆராய்ச்சி செயவதே பொருந்தும்.

## சென்ற இதழ் திருத்தம் - மறுபதிப்பு

மார்ச் இதழின் 36ஆம் பக்கத்தில் தவருன தகவல்கள் பெட்டிச் செய்தியில் இடம்பெற்றுள்ளன. தற்பொழுது சரியான தகவல்கள் இங்கு இடம்பெற்றுள்ளன. ஏற்பட்ட தவறுதலுக்கு மன்னிக்கவும்.

--ஆசிரியர்.

## நாலாயிர திவ்ய பிரபந்தம்

(அருளிச்செயல்)

| அருளிச்செயல் | பாசுரங்கள் |
|---|---|
| நம்மாழ்வார் | 1296 |
| பொய்கையாழ்வார் | 100 |
| பூதத்தார் | 100 |
| பேயார் | 100 |
| திருமங்கையாழ்வார் | 1137 |
| தொண்டரடிப்பொடியாழ்வார் | 55 |
| பெரியாழ்வார் | 473 |
| ஆண்டாள் | 173 |
| குலசேகர ஆழ்வார் | 105 |
| திருப்பாணன் ஆழ்வார் | 10 |
| மதுரகவி ஆழ்வார் | 11 |
| திருமழிசையாழ்வார் | 216 |
| இவர்களுடன் | 3776 |
| திருவரங்கத்தமுதனார் அருளிச்செய்த | |
| இராமானுஜ நூற்றந்தாதி | 108 |
| மணவாள மாமுனிகள் அருளிச்செய்த | |
| உபதேச ரத்னமாலை | 74 |
| திருவாய்மொழி நூற்றந்தாதி | 100 |
| நாலாயிரத்திவ்யபிரபந்தம் மொத்தம் | 4058 |

தகவல்: திரு. என்.சி. கோபாலன் - சென்னை.

கம்பருடைய காவியத்தில் அது அமைந்த முறையில் அனுபவிக்க வேண்டுமே தவிர ஆராய்ச்சி என்ற பெயரால் தம் மனம் போனபடி குழப்புவது தேவையற்றது என்பதை எடுத் துக்காட்ட அமைந்தது போலே தெரிவிக்கப்பட்ட விஷயங்கள்.

கடைசியாக "ராமநாமத்தி னால் அழிவில்லாத ஆநந்தம்" - என்ற தலைப்பில் ஜகத் குரு ஸ்ரீகாஞ்சி சங்கராசாரியார் ஸ்வாமிகள் தெரிவித்தபடி "ராம தீதிராம" என்பதனால் அனைவ ரையும் சந்தோஷப்படுத்துவான் ராமன். தானும் சந்தோஷமாக இருப்பான். தானும் சந்தோஷ மாக இருந்துகொண்டு அனை வரையும் சந்தோஷம் அடை யச்செய்து எல்லோரும் அழி வில்லாத ஸ்வரூபமான ராம னையும் அவன் நாமாவையும் நினைத்து, சொல்லி அழிவில் லாத ஆநந்தத்தை அடைவோம் என்று தெரிவித்து பூர்த்திசெய் கிறேன்.

ராமாய ராமசந்திராய ராமபத்ராய
வேதஸே
ராமாய தஸமை நம:

* * *



# திருமலை திருப்பதி தேவஸ்தானம், திருப்பதி.

## திருமலையில் ஆர்ஜித சேவைகள்

| வ. எண் | சேவை/உத்ஸவங்களின் பெயர்கள் | அனுமதிக்கப் படும் ஆட்களின் எண்ணிக்கை | காலம் | நாள் | ஒவ்வொரு சீட்டின் தொகை |
|---|---|---|---|---|---|
| 1. | சுப்ரபாதம் | ஒருவர் | காலை 3-00 | தினமும் | ரூ. 120/- |
| 2. | தோமாலை சேவை | ஒருவர் | காலை 3-45 to 4-30 வரை | தினமும் | ரூ. 220/- |
| 3. | அர்ச்சனை | ஒருவர் | காலை 4-30 to 5-30 வரை | தினமும் | ரூ. 220/- |
| 4. | ஏகாந்தசேவை | ஒருவர் | மாலை 10-30க்கு மேல் | தினமும் | ரூ. 120/- |
| 5. | கல்யாணோத்ஸவம் | ஐவர் | காலை 10-30 | தினமும் | ரூ. 2500/- |
| 6. | சிறப்பு கல்யாணோத்ஸவம் | இருவர் | காலை 10-30 | தினமும் | ரூ. 750/- |
| 7. | ஆர்ஜித பிரம்மோத்ஸவம் | ஐவர் | மாலை 1-00 | தினமும் | ரூ. 500/- |
| 8. | தோலோத்ஸவம் | அறுவர் | மாலை 1-30 | தினமும் | ரூ. 750/- |
| 9. | அர்ச்சனானந்தர தரிசனம் | அறுவர் | காலை 5-00 | வெள்ளிக் கிழமைகள் தவிர | ரூ. 100/- |
| 10. | ஆமந்த்ரணோத்ஸவம் | ஒருவர் | காலை 3-30 | வெள்ளிக் கிழமைகள் தவிர | ரூ. 620/- |
| | | வெள்ளிக் கிழமைகளில் ஒருவர் | காலை 6-30 மணி | வெள்ளிக் கிழமை மட்டும் | |
| 11. | தோமாலை மற்றும் அர்ச்சனை | ஒருவர் | காலை 6-30 மணி | வெள்ளிக் கிழமைகள் மட்டும் | ரூ. 420/- |
| 12. | சஹஸ்ர தீபஅலங்காரசேவை | ஐவர் | மாலை 5-30 மணிக்கு பிறகு | தினமும் | ரூ. 500/- |

### வாராந்திர சேவைகள்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1. | விசேஷ பூஜை | ஐவர் | காலை 6-00 | திங்கள் | ரூ. 3000/- |
| 2. | அஷ்டதளபாத பத்மாராதனம் | ஐவர் | காலை 5-30 | செவ்வாய் | ரூ. 3500/- |
| 3. | சஹஸ்ரகலசாபிஷேகம் | அறுவர் | காலை 5-30 | புதன் | ரூ. 5000/- |
| 4. | திருப்பாவாடைசேவை | அறுவர் | காலை 5-30 | வியாழன் | ரூ. 5000/- |
| 5. | பூராபிஷேகம் | ஒருவர் | காலை 3-30 | வெள்ளி | ரூ. 750/- |
| 6. | புனுகுப் பாத்திரம் | ஒருவர் | மாலை 3-30 | வெள்ளி | ரூ. 300/- |
| 7. | கத்தூரிக்கிண்ணம் | ஒருவர் | காலை 3-30 | வெள்ளி | ரூ. 150/- |
| 8. | நிஜபாத தரிசனம் | ஒருவர் | காலை 5-30 | வெள்ளி | ரூ. 100/- |
| 9. | ஆடைஅலங்கார சேவை | இருவர் (கணவன்-மனைவி) | காலை 3-30 | வெள்ளி | ரூ.12,250/- |

### வருடாந்திர சேவைகள்/உத்ஸவங்கள்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1. | பவித்ரோத்ஸவம் | ஐவர் | காலை 8-00 | ஆகஸ்ட் | ரூ. 7500/- |
| 2. | வஸந்தோத்ஸவம் | பதின்மர் | மாலை 2-00 | ஜனவரி | ரூ. 3000/- |
| 3. | புஷ்பயாகம் | ஐவர் | காலை 6-00 | நவம்பர் | ரூ. 3500/- |
| 4. | அபித்யேக அபிஷேகம் | ஐவர் | காலை 8-00 | ஜூன் | ரூ. 2000/- |
| 5. | பத்மாவதி பரிணயம் | ஐவர் | மாலை 3-00 | மே | ரூ. 5000/- |
| 6. | புஷ்ப பல்லக்கு | ஐவர் | மாலை 5-30 | ஜூலை | ரூ. 1000/- |
| 7. | கோயில் ஆழ்வார் திருமஞ்சனம் | பதின்மர் | காலை 11-00 | வருடத்திற்கு நான்குமுறை | ரூ. 3000/- |
| | (உகாதிக்கு முன்னாள், ஆனிவார ஆஸ்தானம், சுவாமி பிரம்மோத்ஸவம் மற்றும் வைகுண்ட ஏகாதசி) | | | | |
| 8. | தெப்போத்ஸவம் | ஐவர் | மாலை 6-00 | வருடத்திற்கு 5 நாட்கள் | ரூ. 2500/- (ஒருநாள்) |

மேலும் தகவல்களுக்கு அணுகவும்: 79277, 77777 Ext.3679 மற்றும் 3589

(தொடர் கட்டுரை)

# ஸ்ரீ ராமானுஜர

திரு. மா. சீதாராமன் - காஞ்சிபுரம்.

வித்தை விநயத்தைத் தரும் என்பது ஆன்றோர் வாக்கு. வித்தியா கர்வத் தால ஆடம்பரமாக வாழ்ந்த யக்ஞமூர்த்தியின் நெஞ்சில் எளி மையும் அடக்கமும் ஏற்படலா யிற்று. ஆணடவனின் அருள் மட்டும் இருந்துவிட்டால், உல கில எதுதான் நடவாது?

'தேவராச முனி' எனும் திருநா மம் சாத்தப்பெற்ற யகஞமூர்த்தி யைப் பார்தது யதிராசர் இயம பலானார.

தேவராச முனிவரே உம்மிடம் அளவு கடந்த நூலறிவு காணப் படுகின்றது. அது வீணு தல் கூடாது. எனவே, உம்மி டம் தேஙகிக் கிடககும் ஞானம வெளிப்படும் வகையில் நல்ல தோர் நூலை எழுதி உபகரிக்க வேண்டும்!"

குருவின் வாசகம் கேட்டு யக் ஞமூர்ததி மகிழ்ந்தார. தேனினு மினிய தீநதமிழில் 'ஞானசாரம்', 'பிரமேய சாரம்' என்னும் நூல் களை இயற்றியருளினார். தேவ ராச முனிககெனத திருமடம் ஒன்றும் எழுப்பப்பட்டது.

நாள்கள் சில சென்றன. பெரும்புலமை வாய்க்கப்பெற்றி ருநதும் வாழ்வில சலிப்புற்ற மாணவர் நால்வர் யதிராசரை அண்டினர. தங்களைச் சீட ராக ஏறறு அருளபாலிககு மாறு வேணடினர். அவரோ தேவராச முனிவரின் கல்விப் பெருமையினைக கூறி அவரிடம்



அனுப்பிவைத்தார். அவர்களும் அவரையடைந்து சீடராயினர்.

எனினும், தேவராச முனிவ ரின உளளம நிறைவு பெற வில்லை. "அகந்தை நீங்கி அடக்கமாக, வாழவன்றே எண் ணினேன். இபபோது 'குரு' என் னும் அகந்தை எண்ணைப் பற் றிக்கொண்டால் நான் எவ்வாறு கடைததேறுவேன்!" என்று சஞ் சலப்படலானார். தம் குருவா கிய யதிராசரை அடைந்தார்.

"பெருமானே! தேவரீ ரின பேரருளாலன்றே நான் அகந்தை நீங்கப்பெற்று நிம்ம தியாக வாழ்கிறேன். மீண்டும் எனனைக குருவென நியமிதது அகந்தையினகையில் அகப்பட வைககினறீரே! என்றும் தேவரீ ரின சீடனாகவே இருக்க அருள் புரிதல் வேணடும்" என்று தேவ ராச முனிவேண்டிக்கொண்டார்.

இதுகேட்டு இராமாநுசர் பெரிதும உவகையுற்றார். தேவ ராச முனிவரின் மனப்பக்குவம் கண்டு மகிழ்ந்தார். வரதரா சப்பெருமானின் கைங்கர்யத்தி லேயே வாழ்நாளைச் செலுத்தி வருமாறு யதிராசர் பணித்தார்.

யதிராசரின் அருளாணையில் அகம் மகிழ்ந்த தேவராச முனி தம்மைப் பெறறகரிய பேறு பெற்றவராகவே கருதினார். குரு வுக்கும பெருமானுக்கும் பணி விடை செய்வதிலேயே இன் பமாகக் காலத்தைக் கழித்து வரலானார்.

யகஞ மூர்ததியைத திருத் தித தேவராச முனியாக ஆட் கொண்ட உடையவர் யக் ஞமூர்த்திககுத் திருப்பலலாண்டு தொடங்கித் · திவ்யப்ரபந்தம நாலாயிரமும் ஓதுவித்தார். யகஞ மூரத்திக்குத் தேவராச முனி எனனும் திருநாமத்துடன் அருளாளப் பெருமாள் எம்பெரு மானார் என்னும் திருநாமமும வழங்கலாயிற்று.

மகாபூரணர் எனப்படும் பெரி யநம்பிகளிடமும், மாலாதரர் எனப்படும் திருமாலையாணடா னிடமும் திருவாய்மொழி முத லாக நாலாயிரத்திவ்யப் பிர பந்தங்களை நயமுறவே கற்றி ருந்தார் உடையவர். தாம் கற் றறிந்தவற்றைத் தம் சீடர்களுக் கும் உபதேசிதது வரலானார. எனினும, உடையவர் புதுப் புதுப் பொருள்களைக் கூறிச் சீடர்களை வியப்பில ஆழ்த்து வார்.

ஒருநாள ஸ்ரீசைலம் எனப படும் திருபபதியின் சிறபபு குறிதது்ச் சீடர்களுக்கு விளக் கிக் கொண்டிருநதார். "பூலோக வைகுந்தம் என்னும் பெருமைக் குரியது ஸ்ரீசைலம். இங்கே

பிறந்து காலமெல்லாம் வாழ்ப வர் உண்மையில் வைகுந்தத்தி லேயே வாழ்பவராவார். இறு தியில் இவர்கள் வைகுந்தவா சனின் திருவடித்தாமரைகளின் கீழ் என்றும் வாழ்தல் உறுதி! என்று சிறப்பித்துச்சொல்லிக் கொண்டிருந்தார்.

அன்றைய பாடம் முடிவுற் றது. உடையவர் சீடர்களை நோக்கி வினவலானார். "சீடர் களே! ஒழிவில் காலமெல் லாம் உடனாய் மன்னிவழு விலா அடிமை செய்ய வேண் டும் நாம்!' என்னும் திருவாய் மொழிக்கொப்பத் திருவேங்கட முடையான் திருமலை சென்று நித்ய கைங்கர்யம் புரிய விருப் பமுள்ளவர் யாரேனும் உளரோ?'' என்று சீடர் குழாத்தை வின வினார்.

திருவேங்கடமலையின் குளி ருக்கஞ்சிய சீடர்கள் அனைவரும் பதில்கூறாது அமைதியாக இருந் தனர். அப்போது அனந்தாழ் வான் என்பர் மட்டும் எழுந்தார். "ஆணை கிடைத்தால் அடி யேன் அங்கு சென்று கைங்கர் யம் செய்யக் காத்திருக்கிறேன்!'' என்று பணிவுடனும் பண்புட னும் கூறினார்.

அனந்தாழ்வான் எனப்படும் அனந்தாச்சாரியரின் விடைகேட் டுக் களிப்படைந்தார் உடைய வர்! "குழந்தாய்! நீயே பாக் கியவான்! குலத்துக்கு உன் போனறு ஒரு பிள்ளை பிறந் தால் போதும்! உன் மரபி னர எழுபிறப்பும் புண்ணியமே அடையவர்! உன் போன்ற சீடனைப் பெற்றதால் நானும் பெறற்கரிய பேறு பெற்றவனா னேன் உண்மையில் நீர் ஒரு வரே ஆண் பிள்ளை!'' என்று பெரிதும் பாராட்டிக் கூறி மார்பு றத் தழுவி விடைகொடுத்தனுப் பினார்.

அனந்தாழ்வானுக்கு அன்று முதல் அனந்தாண்பிள்ளை என் றொரு திருநாமமும் வழங்கலா யிற்று.

உடையவரிடம் விடைபெற் றுச் சென்ற அனந்தாழ்வான் திருவேங்கடம் சென்றடைந் தார். திருமலை வாசனின் திருவடிக்கமலங்களை மனமுருகி வணங்கினார். வண்ணமும் நறுமணமும் கொண்டு பூத்துக் குலுங்கும் திருநந்தவனத்தை உண்டாக்கினார். அந்த நந்தவ னத்திற்கு 'இராமாநுசன்' என் னும் திருப்பெயரிட்டார். இன் னும் பற்பல கைங்கர்யங்களைப் புரிந்து அற்புதமாக வாழ்ந்து வந்தார்.

அனந்தாழ்வான் கைங்கர் யங்களைப் பற்றிக் கேள்வி யுற்ற இராமாநுசருக்கு அவ ரைக் காண வேண்டும் என்னும் அவா மேலிட்டது. எனவே, தம் சீடர்களுக்குப் பாடங்களை விரைவாக முடித்துக் கொண் டார். சீடர்களை அழைத்துக் கொண்டு திருவேங்கடம் நோக் கிப் புறப்படத் திருவரங்கப் பெருமானை வழிபட்டு விடை கொண்டார்.

பகவத் நாமத்தைச் சங்கீர்த் தனம் செய்தவாறே வழிப்பய ணம் செய்தார். முதல்நாள் 'இடைகழி' என்னுமிடத்தில் தங் கினார். இரண்டாம் நாள் 'அஷ் டஸகஸ்ரம்' என்னும் ஊரை நோக்கிச் சென்று கொண்டிருந் தார்.

அஷ்ட ஸகஸ்ரம் என்னும் அவ்வூரில் பிராமணச் சீடர் இருவர் வாழ்ந்து வந்தனர். யக்ஞேசர், வரதாசார்யர் என் பது அவர்களின் திருப்பெயர் கள். யக்ஞேசர் என்பவர் பெரும் செல்வந்தர்.

அன்றிரவு தாம் அங்கு வந்து தங்கவிருக்கும் விருப் பத்தை முன்கூட்டியே சீடர் இருவர் மூலம் உடையவர் சொல்லியனுப்பினார். அவர் களும் சென்று சொல்லினர். அதுகேட்டு யக்ஞேசர் மகிழ்ச்சி அடைந்தார். தம் குடும்பத்தா ருடன் கலந்து ஆகவேண்டிய உபசார வேலைகளைச செய் யத் தொடங்கினார். வநத சீடர்களை உபசரிக்க மறந்து விட்டார்.

சீடர் இருவரும் நடந்த செய் தியை உடையவரிடம் சென்று கூறினர். இதுகேட்டு உடை யவர் வருததமுற்றூர. மற்றொரு சீடரான வரதாசார்யர் இல்லம் சென்று தங்க விருமபிப் புறப் பட்டார். வரதாச்சார்யர் அப் போது பிட்சைக்காக வெளியே சென்றிருந்தார். அவர் பத்தினி யாகிய இலட்சுமியம்மாள் மட் டுமே அப்போது தனியாக வீட் டில இருந்தார்.

வரதாச்சார்யர் வீட்டுக்குத் தம் சீடர்களுடன் உடையவர் சென்றூர். அப்போது அந்த அம்மாள் நீராடிப் புடவையை உலத்திய நிலையில் இருந்தார். நாம் வந்திருப்பதை அறிவிக்க எண்ணிய உடையவர் தாம் போர்த்தியிருந்த சால்வையை உள்ளே வீசியெறிந்தார். போர் வையை உடுத்தியவாறே இலட் சுமியம்மாள் வெளியே வந்தார்.

வெளியில் வந்த இலட்சுமி அம்மாள் உடையவரையும் அவ ரது சீடரகளையும் தம இல் லத்தே அமுது செய்தருள வேண்டுமென்று விண்ணப்பித் துக் கொண்டார். தளிகை ஆகும்வரை அருகில் உள்ள குளக்கரையில் தங்கி ஓய்வெடுத் துக கொள்ளுமாறு வேண்டிக் கொணடு வீட்டினுள் சென்று விட்டாள்.

இலட்சுமியம்மாள் பரம ஏழை! அவள கணவர் வரதாச்சார்யர் கொண்டுவரும் பிட்சையில் தான் காலந்தள்ளி வருகிறாள். இப்போது திடீரென அமுது படைக்கப் பொருள்களுககு எங்கே போவது?

திடீரென அவளுக்கொரு எண்ணம் தோன்றிற்று. அவ்வூரில் வாழ்ந்துவரும் வணிகன் ஒருவன் நீண்டநாளாகவே இவள் மேல் ஒரு கண்ணுகை இருந்து வந்தான். மகா உத்தமியாகிய இலட்சுமியிடம் இந்த வணிகனின் எண்ணம் பலிக்குமா?

ஆச்சார்யரை எப்படி உபசரிப்பது என்ற தெளிவு இப்போது ஏற்பட்டுவிட்டது. வணிகனை நினைந்தாள்.

“புலால் உண்பவரும் விரும்பாத இந்த உடலில் காணப்படும் சதையும் எலும்பும் ஆசார்யன் சேவைக்குப் பயன்படட்டுமே! இப்போது நான் வியாபாரியிடம் செல்வேன்! என் எண்ணத்தைச் சொல்வேன்! என் விருப்பமறிந்து வணிகனும் உதவி செய்வான் நானும் ஆசார்யருக்கு அவர் சீடர்களுக்கும் அமுதளிக்கும் பேற்றினைப் பெறுவேன்!”

இவ்வாறு எண்ணிய இலட்சுமி வணிகன் இல்லம் சார்ந்தாள். தன் உள்ளம் விரும்பியதைச் சொன்னாள். அது கேட்டுத் தன் மனைவி மூலமே வேண்டும் பொருள்கள் அனைத்தையும் வணிகன் அனுப்பி வைத்தான்.

அன்புடன் சமைத்த அமுதினை ஆண்டவனுக்குப் படைத்தாள். இலட்சுமி! பின்னர் உடையவருக்கும் அவர் தம் சீடருக்கும் ஒப்புடன் முகமலர்ந்து உபசரித்தாள். பெரிதும் மன நிறைவெய்திய உடையவர் அந்த அம்மையை வாழ்த்த முற்பட்டார். அப்போது வரதாச்சார்யர் பிட்சையை முடித்துக் கொண்டு வீடு வந்தார். ஆச்சார்யரைக் கொண்டு ஆனந்தம் கொண்டார்.

அமுது படைத்த தம் மனைவியின் செயலை எண்ணி அகம் மகிழ்ந்தார். தாம் வறுமையுற்றிருக்கும் நிலையில் எவ்வாறு உபசரிக்க முடிந்தது என்று தம் மனைவியைத் தனியே அழைத்து விசாரித்தார். அவளும் ஒன்றுவிடாமல் கூறினாள்.

இவற்றையெல்லாம் கேட்டுக் கொதிப்படையவேண்டிய கணவன் குளிர்ந்து காணப்பட்டான். தன் பத்தினியை அன்புடனும், ஆசையுடனும் நோக்கி தான் பிறவியெடுத்தது வீண் போக வில்லையென்று குதூகலித்தான்.

“இலட்சுமி! நீயல்லவோ புண்ணியம் செய்தவள். குருவடிவில் வருபவர் பகவானே! அவரே அனைத்துயிர்களுக்கும் பதியாவார். அவர் பொருட்டு அழியும் இவ்வுடலைக் கொண்டு அழியாத பேரின்பத்துக்கு வழி தேடிக்கொண்டாய்! உன்னை மனைவியாகப் பெற்ற நானோ வறியவன்! என் போன்று பாக்கியம் பெற்றவரும் உலகில் உளரோ!” என்றெல்லாம் பலபடப் பாராட்டித் தன் மனைவியின் கையைப் பற்றிக் கொண்டு உடையவரின் திருவடிகளில் நெடுஞ்சாண் கிடையாக வீழ்ந்தார்.

நெடுநேரமாகியும் எழுந்திருக்கவேயில்லை. வரதாச்சார்யர் வாயிலாகவே அனைத்தையும் யதிராசர் கேட்டறிந்தார். அவ்வளவில் ஒருகணம் திகைத்து நின்றார். சற்றுத் தெளிந்து இருவரையும் உணவுண்ணுமாறு கூறினார்.

இலட்சுமியும் வரதாசசார்யரும் உணவு அருந்தியபின், மீதமிருநத உணவை எடுத்துக் கொண்டு வணிகன் இல்லம் சேர்ந்தனர். கணவனை வெளியில் நிறுத்தி உணவுடன் இலட்சுமி உள்ளே சென்றாள் பிரசாரத்தைப் பெற்றுக் கொள்ளுமாறு அனபுடன் வணிகனை வேண்டிக்கொண்டாள். வணிகர் மிகுந்த மரியாதையுடன் அந்தப் பிரசாதத்தை ஏற்றுக் கொண்டார். பசியாறப் புசித்தார்.

என்ன விந்தை! அமுதை அருந்தியதும் வணிகரின் உள்ளத்தில் புத்துணர்வு பிறந்தது. இலட்சுமியின் மீது கொண்டிருந்த எண்ணம் மாறி இங்கிதத்துடன் பேசலானார்:

“அம்மணி! நான் மிகக் கொடிய பாவத்தைப் புரிய நெடுங்காலமாக நினைத்திருந்தேன்! தாங்கள் அளித்த பிரசாதம் என்னைப் புனிதனாக்கி விட்டது. விலங்காக இருந்த என்னை மனிதனாக்கி விட்டீர்! உம் குருநாதரைக் காண்பேனாகில் என் பிறப்பு கடைத்தேறிவிடும் என்று உறுதியாக நம்புகிறேன்! எனவே, அருள் புரிவீராக!”

வணிகனின் மனமாற்றம் கண்டு இலட்சுமி வியப்பும் மகிழ்ச்சியும் கொண்டாள். தன் கற்பு திண்மையாக இருப்பது கண்டு இறைவனுக்கு நன்றி நவின்றாள். தன் கணவனிடம் நிகழ்ந்ததைக் கூறினாள். மகிழ்ச்சியில் மிதந்த வரதாச்சார்யர் தன் மனைவியையும், வணிகரையும் அழைத்துக் கொண்டு உடையவரிடம் சென்றார்.

## ஆதிசங்கரர் உபதேசங்கள்

1) பகவானை நினை. அவர் ஒருவர் தான் உன்னைக் காப்பார்.
2) தாமரை இலை தண்ணீர் போல் இளமை, பணம், பதவி நிலையானவை இல்லை.
3) தினமும் பகவத் கீதை படி.
4) தினமும் சிறிதளவாவது பூஜை செய்.
5) இந்திரியங்களை (மனத்தினை) கட்டுப்படுத்து.
6) குருவின் திருவடி பற்றுக.
7) காலையில் கடவுளை வணங்கு கஷ்டம் குறையும்.
8) விபூதி அணிவதால் வியாதி குறையும்.
9) இந்து தர்மம் ஒரு மகா சமுத்திரம்.
10) பக்தி நூல்கள், உபதேசங்கள், மகான்களின் சொற்பொழிவுகள் கேள்.

தொகுப்பு: திரு. வி. சக்திவேல் - தென்புத்தூர்.

உடையவர் தம்முடைய தூய்மையான கரத்தை அம்மூவர் மீதும் வைத்து அவரகளின் மன சஞ்சலததைப போக்கியருளினார். வணிகன் உன்னையும் சீடனாக ஏற்றுக் கொள்ளும்படி வணக்கத்துடன் கேட்டுக் கொணடான். உடையவரும் வணிகனுடைய வேண்டுகோளை அங்கீகரித்தார. தன்னிடமிருந்த தனத்தையெலலாம உடையவரின திருவடிக்கே காணிககையாக்கிவிட்டான் வணிகன்!

வணிகனிடம் பெறற தனத்தை ஏழைப் பிராமணனாகிய வரதாச்சார்யருக்கே அளிதது அவரை வாழ வைக்க உடையவர் முற்படடார். ஆனால், அச்செல்வத்தை ஏற்க அநத ஏழைப் பிராமணர் மறுத்துவிடடார். குருவின் பலத்தால் எளிமையான வாழ்வு இன்பமாகவும் அமைதியாகவும் நடப்பதாகக கூறித் தனத்தை வேண்டாம் என்று கூறிவிட்டார்.

பணப்பற்றும் மனமாசும் அற்ற சீடரது சீலத்தைக் கண்டு உடையவர் உவகை பூத்தார். அந்த ஏழையின் செயல் அனைவராலும் பின்பற்றத் தக்கது என்று பலபடப் பாராட்டிப் புகழ்ந்தார.

இவ்வாறு அனைவரும் பேரின்பத்துடன் இருக்கும போது முன்புகூறிய யக்ஞேசர் என்னும் சீடர் அங்கு வநதுற்றார. தம்முடனிருந்த மற்றொரு சீடர வீட்டில் உடையவர் தங்கி உபசாரம் பெற்றதறிந்து பெரிதும துக்கித்தார். தனக்கு அந்தப பாககியம் கிடைக்காமைககுத் தாம் எப்போதேனும், ஏதேனும் அபசாரம் செய்திருகக வேண்டும் என்று சிந்தித்தார்.

யக்ஞேசர் நேரே சென்று உடையவரின் திருவடிகளில் வீழநது தனககு நேர்ந்த பாக்கியக் குறைவைக் கூறிப பலவாறு புலம்பினார். உடையவர் யக்ஞேசரை அன்புடன் எடுத்தணைதது ஆதரத்துடன் கூறலானார.

யக்ஞேசரே! உம இல்லத்தில் தங்கி உணவருந்தவில்லை என்று தானே துக்கிக்கிறீர்! அடியார்களுக்குச் செய்த அபசாரத்தாலேயே இப்படி நிகழ்ந்தது. நாம் அனுப்பிய சீடர்களை உபசரிக்கத் தவறிவிட்டீர்! களைத்து வந்த என் சீடர்களைக் கவனிக்காததாலேயே உம் வீட்டில் அமுதேற்க விரும்பவில்லை. இந்த ஏழைப பிராமணரோ எத்தகைய அன்புடன் உபசரித்தார் என்பதை நீரும் அறிவீர்! உம்போன்ற பணப் பேய்களுக்கு இத்தகைய பாக்கியம் எவ்வாறு கிட்டும்?"

உடையவரின் சொற்கேட்டு யக்ஞேசர் உள்ளம் உடைந்தார். தனக்கேற்பட்ட நிலையை மிகவும் வேதனையுடன் கூறலானார்.

"பிரபோ! என் செல்வச் செருக்கினால் இத்தவறு நேரவில்லை. தேவரீர் எழுந்தருளும் செய்தி கேட்டுச் செய்வதறியாது பெருமிதததில் ஆழ்ந்துவிட்டேன். தேவரீருக்குச் செய்யவேண்டிய கைங்கர்யங்களில் கவனத்தைச் செலுத்தியதால், தேவரீர் அனுப்பிய

## ஹோம முத்திரைகள்

ஹோம முத்திரைகள் மூன்றெனக் கூறப்பட்டுள்ளன. அவை ம்ருகீ, ஹம்ஸி, ஸூகரி.

ம்ருகீ : எள்ளோ, நெய்யோ, ஹோமம் செய்வதில் ம்ருகீ முத்திரை.

ஹம்ஸி : ஸமித் ஹோமத்தில் ஹம்ஸி முத்திரை.

ஸூகரி (அல்லது) வராஹி : சரு ஹோமத்தில் இந்த முத்திரை.

எல்லா விரல்களையும் சுருக்கி சேர்ப்பது ஸூகரி; சுண்டு விரலை விட்டு, மற்ற எல்லா விரல்களையும் சேர்ப்பது ஹம்ஸி சுண்டு விரலையும், ஆள்காட்டி விரலையும் விட்டுவிடுவது ம்ருகீ.

தொகுப்பு: திரு. என்.சி. கோபாலன் - சென்னை.

சீடர்களை உபசரிக்க மறந்தே போனேன். இதனால் என்குரு நாதராகிய தேவரீரை உபசரிக்கும் பெரும் பேற்றினை இழந்தேன்! என் புண்ணியக்குறைவை என்னென்பேன்!" எனப் பலவாறு புலம்பினார்.

யக்ஞேசரின் நிலைகேட்டு இரக்கமுற்ற இராமாநுசர் தாம் திருமலை சென்று திரும்பும் போது அவரில்லத்தில் தங்குவதாக வாக்களித்து ஆறுதல கூறிப்புறபபடலானார்.

## கோவிந்தரைக் காணல்

யதிராசர் திருமலை செல்லும் வழியில் அஷ்டஸகஸரம் எனனும் கிராமத்தில் தஙகியதும், வரதாச்சார்யர என்னும் ஏழைப பிராமணர இலலத்தில் அமுது கொண்டதும், யக்ஞேசர இல்லதுக்குத திருமலை சென்று திரும்பும்போது வருகை தந்து அமுது கொள்வதாகவும் கூறிப் புறப்பட்டார் என்று அறிந்தோம்.

அஷ்டஸகஸ்ரத்தை நீங்கித் தம் சீடர்களுடன் மறுநாள் காலை காஞ்சி நோக்கிப் புறப்பட்டு அன்று வரதராசப் பெருமாளைக் கண்டு வணங்கினார். மறுநாள் திருக்கச்சி நம்பிகளைக் கண்டு தீராத இன்பம் கொண்டார். மூன்று நாள்கள் காஞ்சியில் தங்கிவிட்டுக் ஆழ்வார் தீர்ததத்தை நோக்கிச் சென்றூர். அத்தீர்த்தத்தில் நீராடிவிட்டு அன்றே திருவேங்கட மலை சென்றடைந்தார்.

திருமலையைச் சென்றடைந்த யதிராசர அம்மலையின் அடிவாரததிலேயே தங்குமிடம் ஒன்றை ஏற்படுத்திக்கொண்டார். திருவேங்கடப் பெருமானையும ஆழ்வார்களையும் மனத்தினுள் தியானித்தவாறே தம் மனததையும் உடலையும் தூய்மைப்படுத்திக் கொள்ள முயன்று வந்தார். பூலோக வைகுந்தமாய்த் திகழும் திருமலையில் ஸ்ரீமந் நாராயணனும் இலட்சுமியும் எழுந்தருளியிருப்பதால், அம்மலை மீது ஏறுவது அதன் தூய்மைக்குப் பங்கம் ஏற்படுவதாகும் என்று கருதினார்.

யதிராசரின் வருகையை அறிந்த விட்டலதேவன் என்னும் பெயர் கொண்ட அரசன் அங்குவந்தான; ஆச்சார்யரைக் கண்டான். தம்மைச் சீடராக ஏற்றுக் கொள்ளுமாறு பணிவுடன் வேண்டினான். யதிராசரும் அவனைச் சீடராக ஏற்றருளினார். குருதட்சணையாக அம்மன்னன் தனக்களித்த நிலங்கள் அனைத்தையும் ஏழைப்பிராமணர்களுக்கு நன்கொடையாக வழங்கியருளினார்.

திருமலை, திருப்பதியில் வசிக்கின்ற துறவிகளும் மற்றவரும் இராமாநுசரைக் காண ஆவலுடன் கூட்டமாக வந்தனர். தம் பாதங்கள் திருமலைமேல் படுதல் கூடாது என்னும் எண்ணத்தினைக் கைவிடுமாறு அவர்கள் கனிவுடன் வேண்டினர். பெருமைக்குரிய இவர் போன்றோரே மலையேறுதலைக் கைவிட்டுவிட்டால், சாதாரண மக்களும் இவர்களைப் பின்பற்றி மலையேறுதலைத் தவிர்ப்பர். அவ்வாறு நிகழ்ந்தால் திருமலைவாசனுக்கு நடைபெற வேண்டிய நித்திய கைங்கர்யங்கள தடைப்பட்டுப் போகும் என்பதைத் தெளிவாகவும் பணிவாகவும் எடுத்துக்கூறினர்.

அடியார்களது ஆணையாகவே ஏற்று அனைவருடனும இராமாநுசர் திருமலை மேல் ஏறத்தொடங்கினார்.

(தொடரும்)

# தி.தி. தேவஸ்தானத்தாரின் அரும்பொருட் காட்சியகம்

இந்து சமயத்தின் பெருமையினையும், இந்திய மண்ணின் கலாசார அருமையினையும் பிறருக்கு எடுத்துக் காட்டி, அவை மேலும் சிறப்புறும் வகையில் நாளைய இந்தியனைச் சிந்திக்க வைக்கும் ஒரு வாய்ப்பாக, தி.தி.தே. மேற்கொண்டு வரும் பல முயற்சிகளில் ஒன்றுகத் திகழ்வது தற்போது மேலாண்மையினால் அமைக்கப்பட்டிருக்கும் அருட்பொருட் காட்சியகங்கள். தற்போது திருமலையில் கோயிலுக்கெதிரில் உள்ள ஆயிரங்கால் மண்டபத்தில் செயல்பட்டுக் கொண்டிருக்கும் அரும்பொருட் காட்சியகமானது 27-12-80 அன்று முன்னாள் இந்தியக் குடியரசுத் தலைவர் திரு. என். சஞ்சீவி ரெட்டி அவர்களால் திறக்கப்பட்டது. இங்கு திருப்பதி மற்றும் அதைச் சுற்றியுள்ள இடங்களில் கண் டெடுக்கப்பட்டுள்ள பழங்கால நினைவுச் சின்னங்கள், கோயில்கள் சம்பந்தப்பட்ட வேலைப்பாடுகள், சிற்பங்கள், வைதீகச் சடங்கு முறைகள் யாவும் காட்சிக்கு வைக்கும் எண்ணத்தில் இக்காட்சியகம் உருவாக்கப்பட்டுள்ளது. மேலும், தி.தி. தேவஸ்தானத்தாரிடமும் மற்றைய இடங்களிலும் சேகரிக்கப் பட்ட மர வேலைப்பாடுகள், விக்ரகங்கள், உலோக உருவமைதிகள், இசைக்கருவிகள், போர்க்கருவிகள் இக்காட்சியத்தில் இடம் பெறச் செய்யும் முயற்சிகளும் மேற்கொள்ளப்பட்டன. மறைந்த அறிஞர் திரு. வேட்டூரி பிரபாகர சாஸ்திரி அவர்கள் ஆந்திர நாட்டு பல ஜமீந்தார்களிடமிருந்து சேகரிக்கப்பட்ட பொருட்களும் இக்காட்சியகத்தை அலங்கரிக்கின்றன. மற்றெரு அரும்பொருட்காட்சியகம் (எஸ்.வி. கோயில்கலை களஞ்சியம்) வைணவ நெறிமுறைகளைச் சித்தரித்திடும் வகையில் திருப்பதியில் ஸ்ரீகோவிந்தராஜ சுவாமி வடக்கு மாடவீதியில் கச்சேரி நம்மாழ்வார் கோயிலுக்கருகே பெரி யாழ்வார் மண்டபத்தில் அமைந்துள்ளது. இக்காட்சியத்தில் வைணவப் பிரிவின் ஆதியும், அதன் வளர்ச்சியும், சிற்பக்கலை, கோயிற்கலை, உருவமைதிகள், ஆழ்வார்கள், திவ்ய க்ஷேத்ரங்கள் மேலும் மற்றைய கலைகள் சம்பந்தப்பட்ட பொருட்கள் இடம் பெற்றுள்ளன.

**வைணவத்தின் ஆதியும் அதன் வளர்ச்சியும் :**

இப்பிரிவில் வைணவ மதத்தின் தொன்மை விளக்கப்பட்டுள்ளது. மகாவிஷ்ணு என்று வேதத் தாலும் ஸ்ரீமந் நாராயணன் என்று உபநிஷத்துக்களாலும் வணங்கப்பெற்று வளர்ந்த திருமால் வழிபாட்டு வரலாறு விளக்கப்பட்டுள்ளது. இத்திருமால் வழிபாடு இன்று நாடு முழுவதும் 200 வழி நிலைகளில் போற்றப்படுகின்றது. வைகானஸம், பஞ்சாராத்ரம் என்ற ஆகம முறைகளில் தென்னாட் டில் வழிபடப்பட்ட வைணவம் பற்றிய. வளர்ச்சி, அட்டவணை முறையில் விளக்கப்பட்டுள்ளது. தொன்மை மிக்க வைணவத்திருத்தலங்களில் காணப்பட்ட சித்திரங்களும், 15-வது நூற்றுண்டைச் சார்ந்த அரிய சிற்ப உருவமைதிகள் குறிப்பாக நாகலாபுரம் திருக்கோயிலில் கிடைக்கப்பெற்றவைகளும் இங்குக் காட்சிக்கு வைக்கப்பட்டுள்ளன.

**கோயில் நிர்மாண விளக்கங்கள் :** ஆகம மற்றும் சிற்ப இலக்கணப்படிக் கட்டப்பட வேண்டிய கோயில் அளவு முறைகள், கோயில் கட்டுவதற்கு இடம், தேர்ந்தெடுக்கப்பட வேண்டிய நியதிகள், முறைகள் ஆகியன படங்கள், மாதிரிகள் மூலம் விளக்கப்பட்டுள்ளன.

சிற்ப அளவு முறைகள் : ஆண், பெண் சிற்ப உருவமைதிகள் எந்த அளவு முறைகளில் இருந்திட வேண்டும் என்ற விளக்கங்கள் இங்கு இடம் பெற்றுள்ளன.

சிற்பங்கள் : விஷ்ணுவின் திருவுருவ அமைதிகள், எந்தெந்த உருவமைதிகளுக்கு எந்தெந்த வகையின ஆடை, ஆபரணங்கள் இருந்திடல் வேண்டும் என்பதை இப்பிரிவு தெளிவுற எடுத்துக் காட்டுகின்றது.

ஆழ்வார்கள் : தென்னாட்டில் வைணவம் தழைத்தோங்க வகை செய்த ஆழ்வார்கள் மற்றும் விசிஷ்டாத்துவைதக் கொள்கையின் தந்தையான ஸ்ரீராமானுஜரின் வைணவத் தொண்டின் சிறப்பு இங்கு விளக்கப்படுகின்றது.

வைதீகச் சடங்குகள் : அஷ்டதஸ சம்ஸ்காரங்கள் இப்பிரிவில் விளக்கப்பட்டுகின்றன. பிறப்பு முதல் இறப்பு வரை ஒவ்வொரு இந்துவும் கடைப்பிடிக்க வேணடிய வைதீக சடங்கு முறைகள் தெளிவுறுத்தப்படுகின்றன. கோயில் வழிபாட்டின் முக்கியத்துவம் இங்குச் சித்தரிக்கப்படுகின்றது. வைணவக் கோயில்களில் பயன்படுத்தப்படும் பாத்திரங்கள், வாகனங்களின் மாதிரிகளும் இங்குக் காட்சி அளிக்கின்றன.

108 திருத்தலங்கள் : 108 வைணவத் திருப்பதிகளில் உள்ள கோயில்களின் கட்டிடச் சிறப்பு, சிற்பச் சிறப்புக்கள் போன்றவற்றைத் தெரிந்து கொள்ளும் வகையில் 108 கோயில்களின் புகைப்படங்கள் இங்கு இடம்பெற்றுள்ளன.

கலைகள் : இப்பிரிவில் திருமாலின் புகழ் பாடிய மெய்யடியார்களின் சிறபபு தெரிவிக்கப்பட் டுள்ளது. நவீன காலம் வரை சேகரிக்கப்பட்ட விஷ்ணு, சக்தி, ஷணமுகர போன்ற பல்வேறு கடவுளர்களின் உருவமைதிகள் இங்கு இடம்பெறறுள்ளன. குண்ட்ரபாக்கத்தில் 3வது ராஜராஜன் கோயிலிலிருந்து எடுக்கப்பட்ட சேகரிப்புகள் இப்பகுதியின் வரலாற்றைச் சிறப்புறக்கூறும்.

அனுமதி நேரம்: காலை 8 மணி முதல் இரவு 8 மணி வரை.

அனுமதிக் கட்டணம்: பெரியோர்: ரூ.1/- சிறுர்: 0-50.

பொறுப்பாளர்.

# ஸ்ரீ க்ருஷ்ணார்ப்பணம்

டாக்டர். கோ.கு.அ. ரங்கராஜன் - திருப்பதி.

"க்ருஷ்ணார்ப்பணமஸ்து; ஸ்ரீக்ருஷ்ணார்ப்பண மஸ்து; ஸர்வம் ஸ்ரீக்ருஷ்ணார்ப் பணமஸ்து" என்று இவ்வார்த் தைகளை நாம் அறிந்ததேயாம். பல இடங்களில் பலர் வாயி லாகக் கேட்டும் உள்ளோம். ஆனால் சந்தர்ப்பங்கள் வேறு; அர்த்தங்கள் வேறு; எண்ணங் கள் வேறு; உண்மையான பொருள்கள் வேறு.

ஒருவன் பணத்தால் வருந்தும் போது மற்றொருவன் அவனுக் குக் கடனாகப் பணம் கொடுத் தான். சிலநாட்கள் கழித்து எப்போது கடனைத் திருப்பிக் கொடுப்பானோ என்று எண்ணி னான். அவன் கொடுப்பதாக வும் புலப்படவில்லை. பணம் கொடுத்தவன் இனி நமக்குப் பணம் வராது; நம்முடையதல்ல என்று எண்ணிய வண்ணம் செய்வதறியாது 'க்ருஷ்ணார்ப்ப ணம்' என்று உதவி செய்தவன் வெறுமனே இருந்துவிடுகிறான். அந்தப் பணத்தை பகவா னுக்கு அர்ப்பணம் செய்ததா கவும், அவன் பக்தன் என்றும் நாம் அவனை நம்புகிறோம். என்னே உலகியற்கை!

'அம்மா பசசைபோடு' என்று பிச்சைக்காரன் கேட்கும்போது பிச்சைபோட இயலவில்லை என்பது ஒருவிதம்; மறறொருத்தி 'வருகிறேன்' என்று சொல்லிக் கொண்டு வந்து பிசசைக் காரன் ஓட்டில் ஒருபிடி அரிசி இடுகிறாள். அந்தப் பிச்சைக்கா ரன் 'க்ருஷ்ணார்ப்பணம்' என்று சொல்லிக்கொண்டு நன்றிக்கட னாகவோ அல்லது வெட்கத் தின் காரணமாகவோ தலைகு னிந்து செல்கிறான்.

கோவிந்தா! கோவிந்தா!! என்ற குரலொலி வாசலில் கேட் கிறது. காலில் சதங்கை யுடனும் கையில் தாளத்துட னும் வருகிற குரலொலி மனத் தைக் கவர்கிறது. வீட்டிலுள்ள மனைவியானவள் வாசற்கத வைத் திறந்து கொண்டு ஒரு ஆழாக்கில் ஒருபிடி அரிசியை அந்த கோவிந்தனுக்கு அவனு டைய பாத்திரத்தில் அவள் பிச்சையிடுகிறாள். அவன் இருகைகளையும் கூப்பி 'க்ருஷ் ணார்ப்பணம்' என்று சொல்லிக் கொண்டு கோவிந்த நாமத்து டனும் சதங்கை மற்றும் தாள ஒலியுடனும் மற்றொரு வீட்டிற் குச் செல்கிறான்.

வேத விற்பன்னர்கள் வீட் டிற்கு வருகிறார்கள். அவர் கள் வேதத்தில் சில பாகங் களை ஸ்வரத்துடன் ஓது கின்றனர். அவர்கள் ஓதுகின்ற வேத ஒலியில் மயங்கி மிக வும் சிரத்தையுடன் அவர்களை வணங்கித் தன்னால் இயன்ற தைக் கொடுத்தனுப்புகிறாள் இல் லத்தரசி. அவர்களும் மிக வும் மகிழ்ச்சியுடன் க்ருஷ்ணார்ப் பணம்' என்று சொல்லி ஆசிகள் வழங்கிச செல்கின்றனர்.

ஸந்தியாவந்தன காலங்களில் உரிய சடங்குகளைச் செய்து முடிவில 'ஸர்வம் ஸ்ரீக்ருஷ்ணார் பணமஸ்து' என்கிறோம். அது போல் திருவாராதனம் (பூஜை) செய்து முடிந்தபின்னரும் 'ஸர் வம் ஸ்ரீக்ருஷ்ணார்ப்பணமஸ்து' என்கிறோம்.

மதிப்பிற்குரிய பெரியவர்கள் கண்ணிற்பட்டால் அவர்களை வணங்குகிறோம். அப்போது அவர்கள் கைகளைக் கூப்பிக் கொண்டு சொல்கிற வார்த்தை 'க்ருஷ்ணார்ப்பணம்' என்பது.

மற்றும் ஒரு வியப்பு! கேளீர்! 'ராமார்ப்பணம்' என்றோ, 'விஷ் ணுவர்ப்பணம்' என்றோ யாரும் சொல்வதில்லை. ஏன்? சிவ னைப் பரமனாகக் கொள்பவர் களும் 'சிவார்ப்பணம்' என்று சொல்லாமல் 'க்ருஷ்ணார்ப்பணம்' என்றே சொல்கிறார்கள். என்னே இந்த க்ருஷ்ணார்ப்பண ரஹஸ் யம்! இதிலுள்ள மர்மம் தான் என்ன? என்னவென்று தெரிந் துகொள்ளலாமா!

நாம் செய்கிற கர்மங்கள் புண்ணியமானாலும் பாவமா னாலும் தன்னோடு நம் மைப் பிணைத்து விடுகின்றன. பிணைப்பினால் நாம் வெறு மனே இருந்துவிடுவதில்லை. நாம் சேதநர்களல்லவா?

நஹி கச்சித் க்ஷணமபி ஜாது
திஷ்டத்ய கர்மக்ருத் ।
கார்யதே ஹ்யவச: கர்ம ஸர்வை:
ப்ரக்ருதிஜைர் குணை: ॥

(கீதை 3-5)

என்று கீதாசார்யன் சொல்லு கிறபடியே எந்த மனிதனும் எக் காலத்திலும் ஒரு க்ஷணங் கூட ஏதோவொரு கர்மத் தைச் செய்யாமலிருப்பதில்லை;

எல்லா மனிதரும இப்பூமி யின் சம்பந்தத்தால் வளரும் முக் குணங்களால் அவ்வவ்வற்றிற்கு ரிய செயலைக் குறித்துத் தன்னையறியாமலே தூண்டப் படுகிறுர்கள். ஆகவே மனி தன் இறுதிவரை கர்மங்களைச் செய்தே தீரவேண்டும். நல்ல செயல்களைச் செய்தவன் புண் ணியங்களையும், கெட்ட செயல் களைச் செய்தவன் பாவங்களை யும் செய்து அதனால் உண் டாகும் சொர்க்கநரக அநுப வங்களை அநுபவித்தே தீருவர் கள். மோக்ஷத்திற்குப் புண்ணி யம், பாவம் இரண்டும் தடைக ளேயாம். திருவாய்மொழிக்கேற் பட்ட தனியனில்

'மிக்கவிறைநிலையும் மெய்யா
முயிர் நிலையும்
தக்கநெறியும் தடையாகித்
தொக்கியலும் ஊழ்வினையும்...'
(திருவாய்மொழித் தனியன் -5)

என்று ஸ்ரீபராசர பட்டர் என் னும் ஆசாரியர் தெரிவிக்கிறுர். வேதாந்த தேசிகரும் புண்ணிய பாவங்களை முறையே பொன் விலங்காகவும் இரும்பு விலங்கா கவும் வருணிக்கிறுர்.

ஆக, புண்ணிய பாவங் கள் இரண்டும் ஒருவனுடைய மோக்ஷத்திற்குத் தடையென்பது புலனாகின்றதல்லவா!

அப்படியென்றுல் விரோதி என்று அவற்றை விலக்கமுடி யுமா? எவ்வாறு விலக்கு வது? விலக்குவதுதான் நம் மால் முடிந்த ஒன்றா? அப்ப டியே என்றுல் அவ்வாறே கர் மங்களைச் செய்து புண்ணிய பாவங்களைப் பெற்று அவற் றின் பலனாகச் சொர்க்க நரகங் களை அநுபவித்துக் கொண்டு மேலே செல்வதும் கீழே வருவ துமாக, அதாவது

"புனரபிஜனனம், புனரபி மரணம்,
புனரபி ஜனனீ ஜடரே சயநம்"

என்பதற்கிணங்க ஸம்ஸார சக் கரத்தில் சுழல்வது தானா? இதற்கு மறுமாற்றமேதும் இல் லையா? என்ற இக்கேள்விக ளுக்குப் பதில் ஒன்றே உள ளது. ஆனால் மிகவும் கவன மாக மனதில் ஏற்றுக்கொண்டு அதைக் கடைபிடிக்க வேண்டும். அவ்வாறு கடைபிடித்தலினால் இக்கர்மங்கள் எவ்வளவு செய்தா லும் அவற்றின் பலன்கள் உன் னைத் தீண்டாமலும், அவற் றின் பளுவுக்கு நீ ஆளாகாம லும், அவை உன் கைகளுக்கு இடும் விலங்கு உன்னைப் பிணைக்காமலிருந்து, நிச்சய மாக நீ சேர வேண்டிய இடத் திற்கு நீ செல்வதற்கு இய லும். அது எவ்வாறு இயலும் எனின், 'நானே செய்கிறேன்' என்ற அகங்காரம் இல்லா மலும், கடமையை உன்மீது ஏறிட்டுக் (வைத்துக்) கொள் ளாமலும், அந்தப் பகவானே (எம்பெருமானே) செய்விக்கிறுன் என்ற எண்ணத்துடன் செய். இதையே தியாகம் என்பர்.

எதைச் செய்தாலும் செய்ய வேண்டிய கடமை நமக்கு உள் ளதால் செய்தே தீரவேண்டும். ஆனால் எந்தப் பலனையும் கருதாது, கடமை உணர்வுட னும், கைங்கர்ய புத்தியுடனும் செய். அவன் (எம்பெருமான்) கொடுப்பவன்; கொடுத்ததனால் அநுபவிக்கிறேம். அவ்வநுப வத்திற்கு நாம் அவனுக்கு ஒன் றும் செய்யவில்லை; செய்யவும் இயலாது. ஆகவே செய்கி றவரை இந்த எண்ணத்துடன் கர்மங்களை நீ செய். அக்கர் மம் உனக்குப் பிணைக்கயிருக இராது. இதுவே பலத்யாகம் என்பர்.

குடிசெய்வ லென்னும்
ஒருவற்குத் தெய்வம்
மடிதற்றுத் தான்முந் துறும்
(திருக்குறள் 1023)

என்று பொய்யாமொழியும் பகர் கின்றதன்றே!

இதைத்தான் செய்வேன் என்றே, நானே செய்வேன் என்றே, அதை எப்போதும் செய்யாமல் போனால் அதை எப்படிச் செய்வது என்றே சம் பந்தத்தை வளர்த்துக் கொள் ளக்கூடாது. எச்சமயத்தில் எந் தவித கைங்கர்யம் கிடைக்கின் றதோ அக்கைங்கர்யத்தைச் செய்தலே சிறந்ததாகும். குறிப் பிட்ட கைங்கர்யமே செய்வேன் என்ற பற்றுதல் கூடாது. குறிப் பிட்ட கைங்கர்யமே மனவமை தியைக் கொடுக்கிறது என்ற எண்ணமும் எழுதல் கூடாது. இதையே சங்க த்யாகம் என் பர்.

லக்ஷ்மணனும் ஸ்ரீராமபிரா னின் கட்டளைப்படியே பரண சாலை அமைத்துக் கொடுத் தான். எல்லாக் கைங்கர் யங்களையும் ஸ்ரீராமபிரானின் ஏவலை எதிர்நோக்கியே செய் தான்.

இவ்வாறு கைங்கர்ய த்யா கம், பலத்யாகம், சங்கத்யா கம் ஆகிய மூவித த்யா கங்களைப் பற்றுதலால் மேற் சொன்ன புண்ணிய பாவ கர் மங்களின் பற்றுக்கள் அறுந்து விடுகின்றன. நித்ய நைமித் திக கர்மங்களை அனுஷ்டிக்கு முன் ஸாத்விக த்யாகம் செய் யவேண்டும் என்பர் பெரியோர். தினமும் நாம் பகவதாராதனம் செய்யும் போதும்

ஸ்வசேஷ பூதேந மயா ஸ்வீயை:
ஸர்வ பரிச்சிதை:

விதாதும் ப்ரீதமாத்மாநம் தேவ:
ப்ரக்ரமதே ஸ்வயம் ||
(நித்ய க்ரந்தம்)

என்ற ச்லோகத்தை அநுஸந்தித்த பிறகே திருவாராதனம் செய்ய ஆரம்பிக்கிறோம். அதாவது தனக்கே உரித்தான, தானிட்ட வழக்காகப் பயனைப (கைங்கர்யம்) பெறும் எனனால் தன்னுடையதான பரிகரங்களினால் தன்னுடைய மகிழ்ச சிக்காகத் தானே தன்னுடைய திருவாராதனததை எம பெருமான் செய்து கொள்கிறுன் என்பதாகும்.

ஆகவே இதனால் உண்டாகும் மகிழ்ச்சி அவனுடையன. செய்கின்ற நாம் அவனைச் சேர்ந்தவர்கள். இதில் நமக்கென்றும் நமதென்றும யாது உளது. எல்லாம் அவனுடையதே. ஆகையால் பகவதர்ப்பணமாக எது செய்தாலும் அது நமக்கு இன்னலை விளைவிககாது. நாம் எதைச் செய்தாலும பகவதாஞ்யையுடனும், பகவத கைங்கர்ய புத்தியுடனும் அவனுடைய மகிழ்ச்சிக் (ப்ரீதி)காகச செய்ய வேண்டும். இந்த ரஹஸ்யத்தைத் தெரிந்து கொணடு செய்ய வேண்டும்.

யத்கரோஷி யதச்நோதி
யஜ்ஜுஹோஷி ததாஸியத்
யத்தபஸ்யாஸி கௌத்தேயா
யத்குருஷ்வ மதர்ப்பணம்
(கீதை 9-27)

என்று கீதாசாரியன் சொல்கிறுன். அதாவது நீ எந்தக் கர்மங்களைச் செய்தாலும் எதைச சாப்பிட்டாலும், எதை அகனியில சேர்த்தாலும் எதை எவர்க்குக் கொடுத்தாலும், எத்தவத்தைச் செய்தாலும் அவறறை எனக்கு அர்ப்பணம் செய் என்று அரஜுனனுக்கு உபதேசம் எம் பெருமான் செய்கிறுன்.

## அதிபதி தேவதைகள்

1. பஞ்ச பூதங்களுக்கு அதிபதி அக்னி.
2. முதியோர்க்கு அதிபதி இந்திரன்.
3. பூமிக்கு அதிபதி யமன்.
4. அநதரிக்ஷத்திறகு அதிபதி வாயு.
5. சுவர்க்கத்திற்கு அதிபதி சூரியன்.
6. நக்ஷத்திரங்களுக்கு அதிபதி சந்திரன்.
7. வேதத்திற்கு அதிபதி பிரகஸ்பதி.
8. ஸத்ய வசனததிற்கு அதிபதி மித்திரன்.
9. ஜலத்திற்கு அதிபதி வருணன்.
10. ஆறுகளுக்கு அதிபதி சமுத்திரம்.
11. எல்லோரையும் ஆள்பவருக்கு அதிபதி அன்னம்.
12. செடி கொடிகளுக்கு அதிபதி சோமன்.
13. பிறப்பிக்கும் சந்திகளுக்கு அதிபதி ஸவிதா.
14. ஜீவர்களுக்கு அதிபதி ருத்திரன்.
15. ரூபங்களுக்கு அதிபதி த்வஷ்டா.
16. மலைகளுக்கு அதிபதி விஷ்ணு.
17. கணங்களுக்கு அதிபதி மருத் கணங்கள் ஆவார்கள்.

தொகுப்பு: திரு. என்.சி. கோபாலன் - சென்னை.

எம்பெருமானைவிட ஆசாரியர்களுக்குப் பரிவு அதிகம் உள்ளது. ஸம்ஸாரத்தில் உழலாமல், நீர்ச்சுழலில் விழாமல், புதை மணலில் சிககிக கொள்ளாமல் சேரவேண்டிய இடத்திற்கு உன்னைச் சேர்ப்பிக்கிறேன என்ற பகவானை விட மேற்சொன்ன இடர்பாடுகளிலிருந்து எளிதில் மீளுகைக்காகவும் நம்மை உத்தரிக்க (உய்விக்க) வேண்டும் என்ற எண்ணத்தினாலும் பெரியோர்கள் கடைப் பிடித்த 'மநத்ரம்' என்னும் சொல்லின் மகிமையை வேதாந்த தேசிகர என்னும் ஆசாரியர் நமக்கு உபதேசிக்கிறுர்.

யத்கரோமி யதச்நோமி
யஜ்ஜுஹோமி ததாமியத்
யத்தபஸ்யாமி கோவிந்த
தத்கரோமி த்வதர்ப்பணம்

என்னும் ச்லோகத்தால், மேற்சொனன சலோகத்தைக் கூட சொல்லமுடியாதவர்கள் அந்த ச்லோகத்தின் பாவத்தை (உட்பொருளை)ச் சொல்லக் கடவர்கள். 'ஸர்வம் ஸ்ரீக்ருஷ்ணர்ப்பணமஸ்து' என்று கரணங்கள், தவம் முதலியவற்றை 'ஸர்வம்' எனற சொல்லால் சுருக்கி இத்தலைககுக் கைங்கர்யத்தையும் அத்தலைக்குப் பலனையும் பகவதர்ப்பணம் என்று சொல்கிறுர்கள். அதிலும் சந்தர்ப்பச் சூழலைச் சுட்டாமல் 'ஸர்வம்' என்ற சொல்லை விடுத்து 'ஸ்ரீக்ருஷ்ணர்ப்பணம்' என்கிறுர்கள்.

இதுவே 'ஸ்ரீக்ருஷ்ணர்ப்பணமஸ்து' என்ற சொல்லின் கதையாம்.

ஸரவம் ஸ்ரீக்ருஷ்ணர்ப்பணமஸ்து



# ஆன்மீக வளர்ச்சிக்கு உதவும் குருக்கள்

## [ஸ்ரீதத்தாத்ரேய - யதுஸம்வாதம்]

திரு. ஆர். நரசிம்ஹன் திருச்சி.

இயற்கையின் ஒரு அங்கமாக விளங்கும் மனிதன், முன்னேற்றப் பாதையில் செல்ல, பலரிடம் பாடம் கற்கவேண்டியுள்ளது. அவனது ஹ்ருதய அந்தகாரத்தை நீக்கி, ஆன்மீகப்பாதையில் இட்டுச் செல்ல பலர் உதவியுள்ளார்கள். நமது புராணங்கள் நாம் கற்கவேடியவற்றை ஆங்காங்கே புலப்படுத்துகின்றன. ஆண்டவன் ஸ்ரீ கண்ணனாக அவதரித்து ஆன்ம போதனையைக் கீதை வாயிலாக அருளிச்செய்தான். அது மட்டுமல்ல. இந்த கீதாசார்யன் ஸ்ரீமத்பாகவத புராணத்தில் கண்டுள்ளபடி, பல மஹநீயர்கள் வாயிலாகவும் நமக்கு வாழ்க்கை நெறியைக் காட்டியுள்ளான். நாம் கற்கவேண்டியதோ கடல்போன்றது. வாழ்க்கையோ மிகக் குறுகியது. அதனினும் நல்ல கார்யங்களுக்கு இடையூறுகளோ மிக மிக அதிக்ம். எனினும் ஸாரமானவற்றைக் கற்று வாழ்க்கையை பயனுள்ளதாகச் செய்து கொளளுவது அறிவுடைமையாகும். அறிவு, அன்பு, தியாகமனப் பான்மையைப் புகட்டும் ஸ்ரீபாகவதம் ஒரு ஞானக்களஞ்சியம். அதன்கண். நமக்குப் போதிக்கும் உண்மைகளை ஸ்ரீதததாரேய -யதுஸம்வாதம் புலப்படுத்துகின்றன. ஸ்ரீமத் பாகவதம் 11வது ஸ்கந்தம், 7-வது 8-வது ஸர்கங்களை நன்கு உற்று நோக்கினால், நமது அறிவுக்ககண திறக்கும். வாழ்க்கையும் செம்மையாகும். இதனை "அவதூத கீதை" என்றும் குறிப்பிடுவார்கள். இவற்றை சற்று விரிவாக இங்கு ஆராயலாம்.

பொதுவாக நாம் பஞ்சபூதங்களென்று அறியப்படும் தத்துவங்களின்றும் சில போதனைகளை உணரலாம். ஆகாயத்தினின்றும் மனதை விசாலப்படுத்திக் கொள்ளவேண்டும். குறுகிய எண்ணம் கூடாது. பொறுமையை, பூமியினிடமிருந்து கற்றுக் கொள்ளுகிறோம். எப்பொழுதும் அமைதியாகவும் சாந்தமாகவுமிருக்கிறதன்மையை காற்று நமக்குப் புலப்படுத்துகிறது. பிறருக்கு உதவுவதில் தண்ணீரைப் போல் இருக்கவேண்டும். தீமையை, நெருப்பினைப் போன்று அக்ற்ற வேண்டும். இந்த ஐம்புலன்களைக் கட்டுப்படுத்துவது எளிதல்ல. இதனைத்தான் இந்த அவதூத கீதை விளககுகிறது.

யதுமஹாராஜன் தர்மசீலன், ஞானி. ஒருசமயம் அவன் அவதூரான ஸ்ரீதத்தாரேயரைச் சந்தித்து கேள்வி கேட்கலானான். அவரது மனமகிழ்ச்சிக்கு என்ன காரணம் என அறிய ஆவலுற்றுன். ஸ்ரீ பகவதம்சமான அவதூத ஸ்வாமியும் தனது நிலைக்கு தான 24 குருககளிடமிருந்து கற்றுக்கொண்ட பாடமே காரணம் என்று விளக்குகிறுர். அவர்களாவன: (1) பூமி, (2) காறறு, (3) வாயு, (4) ஆகாசம், (5) அக்னி (தீ) (6) சூர்யன், (7) சந்திரன் (8) புரு (9) மலைப்பாம்பு, (10) சமுத்திரம் (11) நதி (12) விட்டில் பூச்சி, (13) தேனீ (14) யானை (15) வண்டு, (16) மான் (17) மீன், (18) பிங்களா, (19) குரரா, (20) பெண், (21) அம்புதயாரிப்பவன் (22) பாம்பு (23) சிலந்தி, (24) குளவி நகுஷனின் பேரனான அந்த யது மஹாராஜனைப் பார்த்து ஸ்ரீதத்தாத்ரேய பகவான் தான் ஒவ்வொருவரிடமிருந்து கற்றுக்கொண்டதாகக் கூறும் விஷயம் நமக்கும் பாடமாக அமைகிறது.

புலனடக்கம் வரப்பெற்ற மனிதன் ப்ராரப்த கர்ம பலனால் தன் பாதையினின்றும் விலகி விடாமலும், சலிப்படையாமலும் வேணும். பொறுமையாகயிருக்கும் தன்மையை பூமியினிடமிருந்து கற்றுக்கொள்ள வேண்டும். இந்த பூமியில் நிலைபெற்றிருக்கும் மலைகள், மரங்கள் இவை நமக்குக் கற்றுத் தரும் பாடம், பிறருக்காகப் பயன்படவும், சுயநல மற்ற தன்மையையும் பிறருக்காக வாழவும் ஆகும். ஒரு யோகியானவன் பிராணனைத் தரிகும் நிலைக்கேற்ப அளவான உணவையும் தன்னுடைய அறிவை பிரகாசப்படுத்தியும் மனம் இந்த்ரியங்களையும் கட்டுப்படுத்தவேணடும். நாக்குக்கு அடிமையாகி ருசியான உணவு வகைகளைத் தவிர்க்க வேண்டும். மனதை அலைகழிக்கும் சூழ்நிலையில் வசிக்க நேரிட்டாலும் காற்றுப்போல்

அவற்றின் நன்மை தீமை ஆகிய வற்றால் பாதிக்கப்படாமல் இருக்கவேணும்.

தன்னை ப்ரஹ்மஸ்வரூபமாக எண்ணி, ஆத்மா சரீரத்தால் பாதிக்கப்படாமல் இருக்கும் தன்மையை ஆகாசம் நமக்குப் போதிக்கிறது. ஆகாசம் போன்று எங்கும் எல்லா இடத்திலும் வ்யாபித்துள்ளது. ஜீவஸ்வரூபம். பஞ்சபூதங்களாலான இந்த பௌதிக சரீரம், எப்படி காற்றினால் ஏற்படுகின்ற சலனம் ஆகாசத்தைப் பாதிப்பதில்லையோ, அதுபோன்று ஆத்மாவைப் பாதிப்பதில்லை என்ற உண்மையைப் புரிந்து கொள்ளவேண்டும். தண்ணீர் போன்று தெளிவுள்ளவனாகவும், புனிதனாகவும், பிறரிடம் மனோவாக்காயங்களால் இனிமையாக நடந்து கொள்ளக் கற்றுக்கொள்ள வேண்டும்.

அக்னியைப் போன்று எல்லா ஆகாரங்களையும் ஏற்றுக்கொண்டு அதனால் ஏற்படும் பாபம் அற்றவனாகவும், மரங்களில் அக்னியானது வ்யாபித்திருப்பதுபோல் எல்லா சரீரங்களிலும் நான் இருப்பதாக என்னை அறிகிறேன்.

வளர்ச்சியும், தேய்வும் ,சந்திரனது கலைகளுக்கே என்பது போல் அவ்வளர்ச்சி, தேய்வு சரீரத்திற்கு ஏற்பட்டதாகும். அவை ஆத்மாவிற்கு சம்பந்தமில்லை என்பதை சந்திரனிடமிருந்து கற்றுக்கொள்ளவேண்டும்.

சூரியனானது தன் கிரணங்களால் நீரை உறிஞ்சி உரிய காலத்தில் மழையாக மாற்றுவது போல், யோகியானவன் தனக்காக இராமல் பிறருக்காக ஏற்றுக்கொள்ளவேண்டும். ஒரே சூரியன், பல நீர்நிலைகளில் வெவ்வேறாக காணப்படுவது போன்று ஆத்ம ஞானத்தைப் பெற முயலவேண்டும்.

பாசத்தை அதிகமாக வளர்க்கக்கூடாது. அதுவே துயரத்திற்குக் காரணமாகும் என்பதை மாடப்புறா கூறும் கதையினின்றும் உணர்ந்து கொள். வேடனால் பிடிக்கப்பட்ட பெண்புறா, குஞ்சுகளைக் கண்ட ஆண்புறா அதே வலையில் விழுந்த மரித்தது. அதுபோல் பற்றை வளர்க்கலாகாது. வீண் துன்பம் ஏற்படும். முக்தி கிடைக்காது.

மலைப்பாம்பைப்போல் தானாகவே கிடைக்கும் உணவை உட்கொண்டு பசியைப்பொறுத்துக் கொள்ள வேண்டும். ருசியையோ அளவையோ எதிர்பார்க்கக் கூடாது. ஆத்ம ஞானி கிடைத்ததைக் கொண்டு திருப்தியடைய வேண்டும். மனதை விழிப்புணர்ச்சியுடனும் உயர்ந்த ஆத்ம சாதனையின் பயனை அடைய முயற்சி செய்த வண்ணம் அமைதியுடனும், கரைகாணமுடியாததைப் போன்று அசைவற்ற தன்மையையும் கற்றுக்கொள்ள வேண்டும். சத்யத்திற்குக் கட்டுப்பட்டு கரையை மீறாதது போன்று ஸ்ரீபகவான் பேரில் மனதை நிலைநிறுத்தவேண்டும். இதந்த்ரியங்களுக்கு வசமாகக் கூடாது.

விட்டில்பூச்சி நெருப்பில் விழுவதுபோன்று ஸ்திரீகளின் வலையில் விழாமலும், கெட்டுப்போகாமலும் இருக்க வேண்டும். புஷ்பங்களின் ஸாரமான தேனைமட்டும் க்ரஹிக்கும் வண்டு போல இருக்க வேணும். ஆனால் அவ்வண்டு போல் பொருளைத் திரட்டுவதில் ஈடுபட்டு நாசமடையாமல், இருக்க வேண்டும். யாசகன் மறுநாளைக்காக எதனையும் சேகரித்து வைக்கலாகாது. அப்படியாயின், தேனை எடுக்கும்பொழுது நாசமடையும் தேனீக்களின் கதிதான் அவனுக்கும். பெண் யானையைக் கண்டு ஆண்யானை மோஹமடைவது போன்று, பெண்களின் வலையில் விழலாகாது. பெண்ணை நம்பி மோசம் போகலாகாது. தேனைச் சேகரிக்கும் தேனீயைப் போல், பொருளைச் சேகரித்து வைக்கலாகாது. அது பிறரால் அபகரிக்க நேரிடலாம். முதலில் வீட்டிற்கு வரும் அதிதிக்குக் கொடுத்து பிறகு தான் தனக்கு என்று நினைக்கவேணும். உணவிற்காகக கவலைப்படலாகாது.

மான் பாட்டைக் கண்டு மயங்கி, வேடனது வலையில் விழுவதுபோல், நாமும் மோஹமடையலாகாது. ரிஷ்ய சிங்கரது வரலாறு இதனை நமக்கு விளக்கும். மீன் தூண்டிலிலுள்ள இரைக்கு ஆசைப்பட்டு வலையில் சிக்கிவிடுவது போன்று, ஆசை என்னும் வலையில் நாமும் அகப்படக் கூடாது. ருசிக்கு ஒருபொழுதும் அடிமையாகலாகாது.

பிங்களா என்ற விதேஹ தேசத்து தாஸியினிடமிருந்து வைராக்யத்தைக் கற்றுக் கொள்ளுகிறோம். மேலும் மேலும் பணக்காரர்களைக் காண ஆவலுற்று, காணாமல் வெறுப்படைந்து, உலகியல் வாழ்க்கையை வெறுத்தாள். அழிவும் தன்மையுடைய பணம், அழகு, உடல் இவற்றை உணர்ந்து, அழியாத ஆத்மாவின் நன்மையை நாடினாள். இறை நிலை உணர்ந்தாள்.

குரரம் என்கிற பறவை தன் அலகிலுள்ள மாமிசத்தைத்

தேடித் திரியும் மற்றைய பக்ஷி களுக்காக விட்டு விடுகிறது. அதுபோன்று பற்றற்று சமநி லையை நாமும் கற்றுக்கொள்ள வேண்டும்.

பெண்ணிடமிருந்து (ஒரு ஜோடி வளையலுடன் கூடிய) தனித்து வாழக்கற்றுக் கொண் டால் சண்டையைத் தவிர்க்க லாம். வீண் சச்சரவு ஏற்படாது.

பரம்பொருளிடம் மனதை ஒரு முகப்படுத்தி அம்பை குறிவைப் பதுபோல் செலுத்தினால் மன அமைதி ஏற்படும். அம்பு தயா ரிப்பவன், தன் வேலையில் ஈடு பட்டு அரசன், சேனைத்தலை வர்கள் வருவதையும் உணரா தது போன்று தன் ஆத்மாவி டம் லயிக்கவேண்டும்.

பாம்பு போல் தனித்திருந்து, தனக்கென வீட்டை நாடாமை யும், கவனத்துடனும், குகை களில் வாழ்ந்து துணையை நாடாமலும் இருக்கவேண்டும். யோகிக்கு சொந்த வீடு, வசிக் குமிடம் கூடாது.

சிலந்தி கூட்டிலிருந்து கொண்டே வலையைப் பின னுவதுபோல் பிறகு தனக் குள் இழுத்துக்கொள்ளுவது போன்று கடவுளின் சிருஷ்டியும் அவ்விதமே என்று உணர்ந் துகொள். நதியிடமிருந்து பரோபகாரத்தைக் கற்றுக்கொள். குளவி ஒரு புழுவை தன் கூட் டில் அடைத்து அதைத்தன் கொடுக்கால் கொட்டி பிறகு அது தன்னையே நினைக் குமாறு செய்கிறது. அதனை யும் குளவியாக மாற்றிவிடுகி றது. அதேபோன்று ஸ்ரீபக வானை நினைத்து ஸ்ரீபரம் பொருளாக ஐக்யமாகிவிடும் தன் மையை அறியவேண்டும்.

கடைசியாக தன் சரீரமே தனக்கு குருவாக அமைகிறது. பற்பல பிறவிகளை அடைந்து இன்ப துன்பங்களை அநுப வித்து உண்மைநிலையை நாள டைவில் அறிய நேரிடுகிறது. பிறகு சரீரத்தை மறந்து ஆண் டவனிடம் ஈடுபடுகிறோம்.

ஒரு குருவிடமிருந்து மாத் திரம் மேற்கூறிய பல உண் மைகளை அறிய இயலாது. ஆகவே பற்பல உண்மைகளைப் பல இனங்கள் மூலம் தான் அறிந்து கொண்டதாக ஸ்ரீஅவ தூதர் கூறுகிறார்.

நாமும் இவற்றைப் புரிந் துகொண்டு சரீரத்தினின்றும் வேறுபட்ட ஸ்ரீபரமாத்மாவை தியானம் செய்து முக்தியை அடைய முயற்சி செய்வோம். ஆண்டவன் அருள் நிச்சயம் கிடைக்கும். எல்லாம் ஈசன் செயல். ✯

# திருமலைக்கு நடந்து வரும் யாத்திரிகர்களுக்கான வசதிகள்

தங்களுடைய வேண்டுதல்களில் ஒன்றாக பலர் திருமலைக்கு நடந்து வருகின்றனர். தி.தி. தேவஸ்தானம் அவர்களுக்காகக் கீழ்வரும் வசதிகள் செய்து உள்ளது.

* யாத்திரிகர்களின் சாமான்கள் இலவசமாக திருப்பதியிலிருந்து திருமலைக்கு எடுத்துச் செல் லப்படும். திருப்பதியிலுள்ள தி.தி. தேவஸ்தான சத்திரங்களில் ஏதாவது ஒன்றில் அல்லது அலிபிரி சாவடியில் (டோல்கேட்) தங்கள் சாமான்களை ஒப்படைத்து, அங்குத் தரப்படும் தங்கள் சாமான்களுக்கான டோக்கனை திருமலையில் 'மத்திய வரவேற்பு நிலையத்தில் காட்டுவார்களாயின், அங்கு அவர்களுடைய சாமான்கள் அவர்களுக்கு ஒப்படைக்கப்படும்.
* காளி கோபுரம், சித்தியேகாடு, மாமண்டூரு மிட்டா, நரசிம்மசுவாமி கோயில், மோகால மிட்டா மற்றும் பல இடங்களில் யாத்திரிகர்கள் சமையல் செய்துகொள்ள வசதிகள் உள்ளன.
* நடைபாதையின் 7வது மைலில் மாமண்டூரு மிட்டாவில் தாங்களே முன்வந்து நடத்தும் 'இஸ்கான்' எனும் தனியார் அமைப்பு நடத்தும் உணவு விடுதியில் சுகாதாரமான உணவு வகைகள் கிடைக்கும்.
* மறைவிடங்கள் உள்ளன. ஓய்வு எடுத்துக்கொள்ள முக்கியமான இடங்களில் நிழற்குடைகள் உள்ளன.
* திருமலைக்குச் செல்லும் வழியில் யாத்திரிகர்களை களவு, ஏமாற்றுதல் போன்றவற்றிலி ருந்து பாதுகாக்கும் பொருட்டு வழிநெடுகிலும் காவல்துறை, கூர்க்கா, பாதுகாப்புத்துறை ஆகியோரைச் சார்ந்த பகல் இரவு நேர ரோந்து ஏற்பாடுகள் உண்டு.

# ஆலயம் ஓர் பல்கலைக்கழகம்

திரு. வெ. சுந்தரம் ஐயர் - பரமக்குடி.

"பள்ளித்தலமனைத்தும் கோயில் செய்குவோம்" என்றார் மகாகவி பாரதியார். உலக வாழ்வில் தீமைகளை மாற்றி நல்லன நாட கல்வியறிவும், அனுபவ அறிவாம் பட்டறிவும், சூழ்நிலைக் கல்வியும் அமைந்தால் தெய்வீக வாழ்க்கை அமையும். இவை யாவும் ஒருங்கே அமையுமிடம் ஆலயம். எனவே பள்ளிகள் யாவும் கோவிலெனக் கொண்டு பல்கலையுணர்ந்து பக்குவப்பட்டு பண்புடன் வாழ்க்கையில் சிறக்க வேண்டும் என்ற அளப்பரிய அவாவினாலே பாரதியார் கூறியிருக்கிறார்.

குறிப்பிட்ட இடத்தில் குறிப்பிட்ட பாடபோதனைகள் தந்து அவற்றில் மனத்தைப் பக்குவப்படுத்துவதால் பள்ளிக்கூடம் என அழைக்கப்பட்டது. பள்ளி என்பது பக்குவப் படுத்துவதையும் கூடம் என்றால் மாணவரும் ஆசிரியரும் கூடியுள்ள இடம் என்பதுதானே பொருள்.

உடல், உள்ளம், ஆன்மா, பக்குவப்படும் இடமே ஆலயம். (ஆ+லயம்) தலைவன் இருக்குமிடத்தில் மனம் லயிப்பது அதாவது ஒன்றிவிடும் பக்குவ நிலையெய்துவது ஆலயம் என்பர். "கோ" என்றால் தலைவன். இல் என்பது வீடு இறையுறையும் வீடு என்பதாகும். ஆன்மா அங்கு ஒருமுகப்படும்.

உலகத்தலைவன் உறையுமிடத்தில் சகல கல்வியும் ஆய கலைகள் அறுபத்துநான்கும் சித்திக்கும் என்பது யாரே உணரார்?

"ஆ" என்பது பசு. லயம் என்பது இணைத்துச் செம்மையுறப் பேணுமிடம். நாமெல்லாம் பசுக்கள். இறைவனே நம்மைப் பாதுகாக்கும் தலைவன். இதனாலே "பசுபதி" என அழைக்கப்படுகிறான். பசுக்களை மேய்பபவன் என்ற பொருளிலேதிருமாலும் இடையன் எனப்பெயர் கொண்டு பசுக்களை மேய்ப்பது போல, பாதுகாப்பது போல மாந்தரையும் பக்குவப் படுத்திக் காப்பான் என்பதுதானே உண்மை.

எல்லாக் கலைகளும் எளிதில் இன்புறக் கற்பிக்கும் இடம் திருக்கோயில்கள். சமய விளக்கம், சமுதாய நெறி, பண்பாட்டின் உயிர்நாடி, பல்கலைக் கற்பிக்கும் பள்ளிக்கூடமாக, கல்லூரியாக, பல்கலைக்கழகமாக விளங்கும் நன்னெறிச் சாலை, கோயில். மண்டபங்களில் கற்றூண்கள் அமைந்திருக்க ஒவ்வொரு பகுதியிலும் ஒவ்வொரு விதமான கலைக் கல்வி பயிற்றுவிக்கும் தலமாக இருந்ததால் (கல்தூண்கட்கிடையில் கற்பிக்கப்பட்டதால்) கல்லூரி என்றனர்.

உயிர், தளை - இறை ஆகிய முப்பொருளின் வைப்பாகும் ஆலயம். ஒவ்வொரு சமயத்தாரும் கூட்டமாகக் கூடித் தத்தம் திருக்கோயில்களில் தொழுது, சமய வளர்ச்சிக்கும், சமுதாய வளர்ச்சிக்கும் பாடுபடுகின்ற நிலை சிறப்பானதாகும்.

காலங்கள் பல மாறினாலும் கலை பல சொல்லும் கோயில்கள் காலங்காட்டும் அற்புதங்கள் - வரலாற்றுக் கருவூலங்கள். மன்னர்கள் ஆட்சி, மக்களின் வாழ்க்கை, மக்களாட்சிக்குத் தேர்வுமுறைகள் பண்டைய வரலாறுகள் இடத்தின் சிறப்பு (புவியியல் ஆய்வு) அறிவியல் போன்றவற்றோடு புலவர்கள் தந்த பாடல்கள், கல்வெட்டுக்கள், மண்ணின்தன்மை, மரம் வளர்த்தல் (தலவிருக்ஷம்) வழிபாட்டிற்கு என நந்தவனம் அமைத்தலால் தூய காற்றும், மருத்துவ மூலிகைகளும் சிறந்திடவும் நூலாய்வு, சிற்ப, ஓவிய, இசையால் நாளும் சிறந்திடவும் திறனாக்கித் தருவன திருக்கோயில்களே!

வெளிநாட்டவரும் வியந்து போற்றும் ஆலயக்கட்டுமானம் அறிஞர்கள் போற்றும் அற்புத வேலைப்பாடு அனைத்திற்கும் மேலாக ஏற்படும் மன அமைதி அயல்நாட்டவர்கள் அமைதியை நாடி புண்ணியபூமியாம் பாரதத்திற்கு வந்து திருக்கோயில்களில் தியானித்து ஆனந்தம் பெறும் அற்புதம் இன்றும் காண்கிறோம்.

ஆகமங்கள் இருபத்தெட்டும் திருக்கோயில்களில்தான் ஒன்றிணைந்துள்ளன. அன்னமயம், பிராணமயம், மனோமயம், விஞ்ஞானமயம், ஆனந்தமயம்

ஆகிய ஐவகை நிலைகளே ஐந்து சுற்றுக்களாக (பிரஹாரங்களாக) விளங்குகின்றன.

சத்தான மெய்ப்பொருள் என்றும் உளது. அழிவற்றது. வடிவ வேறுபாடற்றது. எல்லாமாகி இருப்பது இருந்தபடி இருப்பது. இதுவே சுத்த வெளியாகும். இதைச் சுற்றி அகன்ற அகண்டாகாரத்தில் அணுத்துகள்கள் சுற்றிவர நாதமும் செயலும் ஏற்படுகின்றன. இதுவே சிவசக்தி வடிவாகும்.

## லிங்க வடிவம் :

லிங்கத்தின் அடிப்பாகம் பிரம்மபாகம் ஐம்பூதம், தன் மாத்திரை, ஞானேந்திரியம், கர்மேந்திரியம், நான்கு அந்தக் கிரணம் ஆகிய ஆன்ம தத்துவ விளக்கம். இதுவே உலக உற்பத்தித்தத்துவம்.

இது சென்று, அணு அணுவாகத் தேய்ந்து சூட்சுமமாகி வித்யா தத்துவத்துடன் இணைகிறது. காலம் கலை, நியதி, அராகம், வித்தை, ஆண், பெண், மாயை ஆகிய வித்யா தத்துவமே ஆக்கத்திறனுடையது. நடுப்பாகமாக அமைந்த இதை விஷ்ணுமயமானதென்பர்.

இதற்கு மேலே சிவதத்துவம் விளங்கும். இதை மாணிக்கவாசகர் "எழுகின்ற ஞாயிறே போன்று நின்ற நின் தன்மை" என்று சிவனைக்கூறுவர். இதில் தூய அறிவின் சுத்தவித்தை அருளாட்சித்திறனான ஈசுவரம், என்றும் ஒருமைகொண்ட சதாக்கியம். நாதமான சக்தி, பிந்துவான சிவம் ஆகிய தத்துவ நிலை விளக்கும்.

## ஐந்தொழிற்கலை :

(1) ஆக்கம், தோற்றம் (2) காப்பு, திதி (3) நீக்கம் - சங்காரம், (4) அமைதி, மறைப்பு, திரோபவம் (5) அருளல், அனுக்கிரகம் எனக்கூறுவர்.

## சக்திகள் ஐந்து :

பிரம்மா - கலைமகள், விஷ்ணு-திருமகள், ருத்திரன்-மாகாளி, சதாசிவன்-மகேஸ்வரி, சபாபதி-மனோன்மணி என்பர். சபாபதி மனோன்மணியுடன் விளங்கி உலகாடல் புரியத்தோன்றும். சிவசக்தியான பிந்துநாதக்கலையே உலகம் உற்பத்தியாகும்.

ஒவ்வொரு மூர்த்திக்கும் யந்திர மந்திர முறைகள் உண்டு. இந்த யந்திர சக்தியால் கோயில் பெருமைபெறும். ஞானவான்கள், இறையம்ஸம் கொண்ட பெரியோர் உருவாக்கிய கோயிலும் பெருமை பெறும். பூரண ஞானிகள் ஜீவ முக்தர்களாகியுள்ள இடங்களில் முறைப்படி அமைந்த கோயில்களும் பெருமைபெறும். அருள் மிகு ஞானாசிரியர்கள் அமைப்பால் அருளாட்சி நிறைந்திருக்கும்.

இதற்குச் சான்றாக திருப்பதியில் ஜனாகர்ஷண, தனாகர்ஷண் யந்திரங்களின் அமைப்பால் பொலிவுடன் திகழ்கின்றது. பழநியில் ஞானாகர்ஷண யந்திரம் கூரிய அறிவு நல்க கூடுகின்ற கூட்டத்தைக் காணலாம். சித்தர்கள் ஜீவ சமாதியுள்ள இடங்களில் அருட்காந்தம் நிலவுகிறது. தன்வந்திரி நவ பாஷாணக்கற்களை உருவாக்கிய சித்தராவார். மருத்துவ கற்கள் என்றும் எல்லோருக்கும் பயன்பட சித்தாமிர்தக்குளம் என இன்று அழைக்கப்பெறும் அமிர்தகுளத்துள் உள்ள கிணறுகளில் இட்டு சித்தியடைந்தார் என வரலாறு (புள்ளிருக்கும் வேலூர்) கூறும். இதனால் சித்தாமிர்த குளத்தில் நீராட நோய் நீங்கும் சக்தி ஏற்படுகிறது. சித்தரின் அருட்காந்த அலைகள் அன்பர்கட்கு அருள் ஒளி நல்கி ஆனந்தமளிக்கிறது.

கோபுரம் ஜீவர்களின் பரிணும விளக்கம். கொடிமரம் யோக சக்தி விளக்கம். பலிபீடத்தில் தேவையற்ற ஆசைகளை பலியிட்டு உடலிலிருந்து கழற்றிவிடவேண்டும். பசுபோல சாந்தியை நோக்கித்தவமேற்கொள்ள வேண்டும்.

"ஐம்ப தெழுத்தே யனைத்து
வேதங்களும்
ஐம்ப தெழுத்தே அனைத்து
ஆகமங்களும்
ஐம்ப தெழுத்தின் அடைவை
அறிந்தபின்
ஐம்ப தெழுத்தும்
போயஞ்செழுத்தாமே"
-திருமூலர்

## வழிபாடு :

ஐந்தெழுத்து மந்திரம் அன்புடனே செப்புவோர்க்கு வேதங்கள், ஆகமங்கள் எளிதில் கைவரும் என்பதே உட்பொருள்.

பசுவுக்கும் பதிக்கும் இடையேயுள்ள மாயை என்பது விலகிட சோதிச்சுடரொளி தோன்றும். இறையோடு இரண்டறக் கலக்கும் - மனமொன்றிக் களிக்கும். சரியை எனும் ஒழுக்கத்தால் தூய்மையுற்று, கிரியை எனும் செயல் வழிபாட்டால் அருள் கூட்டி யோகமெனும் தியானத்தில் ஒருமைகூட்டி ஞானம் எனும் உயர் அறிவால் (சித்தியால்) இறைத்தன்மையாதல் வழிபாடு ஆகும்.

அன்பும் அருளும் பெருகப்பெருக ஓம் ஒலிக்கும் புருவநடுவே ஒளிநிலவும். உள்ளத்தில் திருவடி நடனம் காணமுடியும். உச்சியிலே சக்தி நிறையும்.

## இலக்கியங்கள் :

தமிழகத்துத் திருக்கோயில்கள் அருள் நெறியோடு இலக்கியங்கள் தோன்ற தாய்வீடாக அமைந்தன பக்தி இலக்கியங்கள் பண்பாட்டை வளர்த்தன. கல்லெழுத்து இலக்கியங்கள் காலத்தால் மாறுபடா வரலாறு காட்டும் காலக்கண்ணுடிகள் ஆயின. இலக்கியத்தில் ஓர் உறுப்பாக அமைந்தன.

செங்கோன்மை செப்பும், ஆட்சித்திறன் உரைக்கும். சிற்பங்களும், ஓவியங்களும் உலகறிந்து கொள்ள அன்னை ஊட்டும் அமுதமென கலை காட்டி நிற்கும். பண்ணுேடு பாடல் பரிமளிக்கும். பக்தி சுவை மிகுக்கும் இசை, நடனம், நாடகம், உரையாற்றல், இசைப்பேருரை, போன்றவையும், அவற்றின் நுட்பங்களும் ஓலைச்சுவடிகள் கூறும் செய்திகளும், உவமைகளும் படி எடுத்தபலவும் திருக்கோயில் வளர்த்த இலக்கியக் கலைகள்தாமே!

வேத நூல்கள் கற்றலும், கற்பித்தலும் அவற்றின் விளக்க உரைகளும், சோதிடக் கலையும், வான்வெளி அறிவியல், கோள்களின் செயலால் விளையும் பலன்கள், மருத்துவ ஆய்வு, கட்டடக்கலை, போன்ற எண்ணற்ற கலைகள் திருக்கோயில்களாலே திறனோடு வளர்ந்தன. வளராத கலை ஏதுமில்லை எனலாம்.

## கோவிலார் உயர் செய்கை:

அரசனுக்கும், குடிகட்கும் பாலமாகி ஆலோசனை நல்கினர். அதற்கேற்ப அறிவுத்திறன் அமையல் பெற்றிருந்தனர். அன்பு, நாண், ஒப்புரவு, வாய்மை கண்ணுேட்டம் ஆகியன பொருந்திய ஆன்றேர்கள் திருக்கோயில் தொண்டு ஏற்று சிறப்பித்ததால் பல்கலையும் சீர்பரவி பண்புடைச் சமுதாய மலர்ச்சிக்கு உறுதுணையானது. அரசனின் அதிகாரம் ஆங்கில்லை. அரசனும் ஓர் குடிமகனாக திருக்கோயிலாளர்கள் சொல்வதைக் கேட்டு அறம் நாட்டியதால் கலை செழித்தது. காலம்பல கடந்தும் வரலாற்றுக் கல்வி படைத்தது.

## சமுதாயப்பணி :

விளைநிலங்கள் செம்மையுற திருக்கோயில் உதவ, விளைபொருளில் ஒரு பகுதியைக் கோயிற்களஞ்சியத்தில் விவசாயிகள் சேர்த்தனர். பெருமழை, வறட்சி, போர்க்காலம் போன்ற சமயங்களில் களஞ்சியச் சேமிப்பு தானியங்கள் மக்களைக்காத்த கருவூலங்களாயின. இயற்கையின் சீற்றத்திலிருந்து பாதுகாப்பாக மக்கள் இருக்க ஏற்ற தொண்டு இல்லமாயிற்று.

திருக்கோயிலுள் வலம் வரும் போது அகலமான மேடைகள் நீண்டு சுற்றுகி அமைந்திருக்கும், அவ்விடம் பாதுகாப்பு இல்லமாக இயற்கை சீற்ற காலங்களிலும் போர் காலங்களில் பெண்டிர் சிறுர், முதியோர், நோயுற்றேர்கட்கு பாதுகாப்பாகவும் விளங்கியது.

மற்றைய நாட்களில் ஆட்சியாளரும் கோயில் நிர்வாகிகள், பணியாளர்கள் திறன்கூட்ட ஆலோசனை மண்டபமாகத் திகழ்ந்தன. ஊராட்சி, பேரூராட்சி நிர்வாகிகளைத் தேர்ந்தெடுக்கத் திருக்கோயில்களைக் கொண்ட அன்றைய நிலை இன்றும் நூல்கள் படிமங்கள் வழியில் உணரமுடிகிறது. நிர்வாக சீர்திருத்தங்கள் ஏற்படுத்தும் அரணுக கோயில் அமைந்திருந்தது.

கோயிலுக்குள் சுரங்கப் பாதை அமைந்திருந்ததை இன்றும் பல கோயில்களில் காணமுடிகிறது. பூமிக்குள் சுரங்கப்பாதையில் ஒளி, ஒலி, காற்று மறைவிடம் அமையுமாறு அமைத்த கலைகள் வியப்பிற்குரியன.

கருணைபொழியும் அன்பு இல்லமாக, கலைகளின் பிறப்பிடமாக, பல்கலைக்கழகமாக விளங்கின தன்மை உணர்ந்து போற்றிப் பேணிப் பின்பற்ற வேண்டியதாகும். சமய, சமூக, சமுதாயப் பண்பாட்டை வளர்த்திடும் திருக்கோயில்களேயாகும்.

## திருக்குளத்தொண்டு :

கோவில்களுள்ளும், வெளியிலும், திருக்குளங்கள் அமைக்கப் பட்டிருக்கும், தலவிருட்சங்கள் பேணப்பட்டன. திருக்குளத்துத் திருப்பணிகளால் ஆழப்படுத்தப்பட்டும், நீர்நிலைகள் சுத்தப்படுத்தப்பட்டன. திருக்கோயிலைச்சுற்றி வீதிகள் அமைய வீதிகளின் வெளிப்புறப் பகுதிகள் ஏரிகள், கண்மாய்கள் அமைந்தன. இதனால் வெப்ப மிகுதியான போதும் வறட்சி மிகவுற்ற காலத்திலும் நீர் ஊற்றுக்களாக நிலத்தடி நீர் கேணிகள் வாயிலாக காணி கட்டுப் பாய்ச்சவும், குடி நீர்தட்டுப்பாடின்மையும் விளங்கும். தற்போது குளங்கள் மேடிடப்பட்டு கட்டிடங்கள் தோற்றமுறவே நீர் நிலைகள் இன்மையால் நிலத்தடி நீர் அமையாது சிரமப்பட வேண்டியுள்ளது கண் கூடாக அறியும் உண்மை.

மரங்கள், வளர்த்தல், நந்தவனப் பராமரிப்பு இவற்றல் தூய காற்று, நோய் நீக்கும் மூலிகைகள் கிடைக்கப்பெற்று திடனுடன், செம்மையுடன் வாழ முடிந்தது. காலம் தவறு

நன் மழைக்கு வனமே முக்கியமென்று உணர்ந்துமரக்கன்றுகள் நட்டும், பாதுகாத்தும் வந்தனர். ஏரி, குளம் இவற்றைச் சுற்றி நெடு துயர்ந்து படர்ந்த பயன்மிகு பல மரங்கள் பாதுகாக்கப் பட்டதை அறிய முடிகிறது.

## சமூகப்பணி :

ஒவ்வொரு கோயிலும் ஒவ்வொருவித அமைப்பில் இருந்தாலும் அதன் பொதுநோக்கு சமூகநலப்பணிதான். அன்பில் உறவு கொள்ளல், அறிவை வளர்த்தல், ஆற்றலைப் பெருக்குதல், ஆய்வுகள் மேற்கொள்ளல். உடல் நலம் பேணல், கலவியும் கலையும் சிறந்தோங்குமிடம் பாடுபடுதல் பிற உயிரினங்களைப் பேணிப்பாதுகாத்தல், மனிதனின் மன நிலை, உணர்விக்கப்படுதல். உயர்வுக்கு வழிகாட்டல், சக்தியைப் பகிர்ந்து கொள்ளல், ஆன்றோரைப் போற்றி அவர் தம் நல்லுரை ஏற்றுச் செயல் படுதல் போன்றவற்றினை பக்தியின் வாயிலாக சக்தியைப் பெருக்கச் செய்தது ஆலயங்களே ஆகும். ஆன்மநேய ஒருமைப்பாட்டை வளர்த்தது.

“ஆறில்லா ஊருக்கு அழகு பாழ்” என்றனர். ஆறு எல்லா ஊர்கட்கும் நீர் பாய வழியமைப்பது கிடையாது. இதனால் “ஆறு” நதிநீர் பாயாப் பகுதிகளில் மக்கள் வாழக்கூடாதென்பது பொருளல்ல.

“ஆறு” என்றால் பாதை, வழி என்ற பொருள் உண்டு. திருக்கோயிலுக்குச்செல்ல நல்ல பாதையமைந்திருக்க வேண்டும். திருக்கோயில் மாத்திரம் இருந்து பலரும் வந்து ஆங்கே அறிவுக்கண்கொண்டு விளக்கமுறச்செய்யும் பாதை (பண்பாடு) இல்லாவிடில் பாழாகும் என்பதே மறைபொருளாகும்.

பல ஊர் மக்களும் வந்து போக வசதியான பாதைகள் அமைந்தால் கல்வி, கலை பரிமாற்றம், வாணிப வளர்ச்சி, நேச ஒற்றுமைப்பாடுமிகும். செல்வமுடன் அறன் திறனோங்கி நல்வாழ்வினை அமைக்கும்.

எனவே சாலையமைத்தல், சாலையோரம் மரங்களை வளர்த்தல், சிறப்புற நடத்தப் பட்டது.

## தொண்டு செய்ய விண்டுரைக்கும் ஆன்மீகம்

நாவுக்கரசர் திருத்தொண்டு திருக்கோயில்களில் உழவாரப்பணியாகும். திருக்கோயிலுள்ளும் வெளியும் தோன்றும் களைகளை அப்புறப்படுத்திய செய்தியாவரும் உணர்ந்ததே! தன் தொண்டால் தனது உடலில் இறைச்சக்தியான காந்த ஆற்றலைப்பெற்றுக்கொண்டவர் திருஞான சம்பந்தர். அவரது உயிர் காந்த ஆற்றலால் கூன் பெற்ற மாறனை குணப்படுத்தி நின்றசீர் நெடுமாறனாக்கிட முடிந்தது. தமிழ்பாடலின் மூலமே பூம்பாவையை எழுப்பித்தர முடிந்தது. தண்டியடிகளின் திருக்குளத் திருத்தொண்டும் உணரத்தக்கது. மனத்தாலே இறைத்தொண்டாகத் திருக்கோயில் மனத்துள்ளே கட்டிய மனக்கோயில் கொண்ட பூசலாரின் இறை உணர்வு காந்த ஆற்றல் காஞ்சி அரசனையே அவரிடம் அடிபணிய வைத்தது.

## இனி நாம் கொள்ள வேண்டியது

தொண்டுள்ளம் இறைபக்தி கொண்ட அன்பர்கள் மனத்தில் இறையின் காந்த ஆற்றல் நிரம்பியிருக்கும். அவர்களது சொல்லும், செயலும் அறன் வலியுறுத்தும், கோயில் வழிபாடு என்பது பார்த்து மகிழ்தல் அல்ல. இயன்ற அளவு இறைக்கும் இறை உணர்வாளர்கட்கும் உதவி செய்தும் இறைவனை அன்புடன் மனத்தில் இருத்துதலும் உயர் வழிபாடாகும்.

இறையருட் காந்த ஆற்றல் பெருகும். திருக்கோயில் வழிபாடும் திருத்தொண்டும் சக்தியைப் பெருக்கும். முன்னர் திருத்தொண்டு செய்த அடியார்கள் போல இன்றும் ஒரு சிலர் இருப்பினும் விரைந்து பலரும் தொண்டாற்றும் காலம் வெகுதூரத்தில் இல்லை. நாம் வாழும் இல்லத்தைச் சுத்தமாக, அழகுறப் பேணிக்காப்பது போல் உயர்த்தலைவனாம் இறையுறையும் கோயிலையும் நன்கு பேணிப் பாதுகாப்பது நலம் பயக்கும்.

வாழ்வும், வளமும், வையகம் முழுவதும் பெருகிட ஆலயப் பணிகள், வழிபாடுகள் சிறக்க வேண்டும். மலைக்கோயில்கள், ஆற்றோரக் கோயில்கள், ஏரிக்கரைக்கோயில்கள் என அமைந்த நிலைகள், எப்போதும் எல்லா நலன்களும் எல்லோரும் பெற ஏற்றமுற அமைந்தது. அவற்றை நன்கு பேணிக்காப்பது நம் உயர் கடமையாகும். வனங்களில், மலைகளில் நடந்து செல்லல், அற்புதத் தோப்புகட்கருகில் நடந்து செல்லல், கடல்கரையோரம் செல்லல் என்ற முறையில் கோயில்கள் அமைந்தநிலை உடல், உள்ளம், ஆன்மா சிறப்புறச் செய்யவே நம் முன்னோர் ஏற்படுத்திய முறையே என்பதை அறிந்து அவர் வழிநடக்க முயலவோம். நலம் பெறுவோம்.

"உருவைக்கண்டு தொழுதுஎண்ணி
உள் ஒளியைக்கண்டே
உருவில் ஒரு தேவை உணர்"

என்ற தொடரை எண்ணினால் ஒரு தேவை என்பது ஆன்மீகத் தொண்டு என உணரலாம்.

நிறைவாக :

உலகு பஞ்சபூத சக்தியால் அமைந்தது. நம் உடலோ ஐம் பொறிகளால் ஆனது. சிவ அம்ஸம் - நம்உடல் ஏற்பட்டதை விளக்கும். இறையாற்றல் நம் உடலிலும் உண்டு என ஆன்றோர் கூறுவர்.

சிவனே நாம் :

சிவனுக்கு ஐந்து முகங்கள் அவை ஊர்த்துவம், வாமம், அகோரம், தத்புருஷம், ஈசானம் இத்தோடு சத்யோஜாதம் என்பதும் இணைந்துள்ளது. இவை சக்தி நிலையங்கள். சத்யோ ஜாதத்திலிருந்தே ஆகமம் வந்தது. ச,ரி,க,ம,ப,த,நி என்ற ஏழிசை பிறந்தது.

ஐம்பொறிகளால் உருவான மனிதன் ஆறுவதாகப் பகுத்தறிவு பெற்றுள்ளதால் புதிய புதிய செயல்பாடுகளும் தோற்றமும் கொண்டன. ஈசனால் ஈசனைப் போல் அமைந்த மனிதன் தெய்வ நிலை கொள்ள வேண்டியதும், அதற்கான முயற்சிகளைச் செய்தாலும் சிறந்திட வழியாகும்.

அழகு சிற்பங்களுடன் அமைந்த அருட்கலை விளக்கமே மனிதன். ஆகம விதிகளின் படி 64 கலை வளர் இடமான கோயிலை 64 பாகமாக அமைத்தனர். 32 அகம் உட்கட்டம் 32 அகம் வெளிக்கட்டம், 32 தேவதைகளை யந்திர மந்திரம் வடிவில் நாட்டுவர.

ஆதித்யம், அம்பிகாம், விஷ்ணும், கணநாதம் மகேஸ்வரம் என்பன ஐவகை சீர்மைகளாகும். இப்படிப்பட்ட இடங்களில் கலைச்சிறப்பு மிளிரும். தவிர மன அமைதிக்கும் இறையாற்றலை எளிதில் மனிதன் பெறவும் வழி வகுக்கும். தியானம், மூலம் திறனேற்றலாம். உடலில் நிலை நிறுத்தவும் முடியும்.

பல்கலைக்கழகமாம் ஆலயம். மனத்தைப் பக்குவப் படுத்தி கலை வளர்க்கின்றதென்பதில் ஐயமேது. மனித மனம் இறையுடன லயப்பட்டு, இறையின் ஆற்றலை ஏற்றுத்தொடங்கும் செயல் எடுப்பாகத் தோன்றி ஏற்றம் பெற்று நிலைக்கும். வெற்றியே கிட்டும். தியானத்தால் தெய்வீக நிலையும் பெற்று வளமோடு புகழ் நாட்டலாமே!

உலகெலாம் கோயிலாகி
உள்ளமதில் ஆற்றலோங்கி
பல்கலையும் பார்சிறக்க
பக்தியுடன் செய்திடவே
நிலையாகும் நல்வாழ்வு
நிறைவாக்கும் சுந்தரமே
துலங்குகின்ற தொண்டுகளே
தோத்திரப் பொருளாமே!

# குருக்ஷேத்திரப் போருக்குப்பின்பு

மகாபாரதப் போரின் முடிவில் உயிர் தப்பியவர்களில் கிருபாச்சாரியர, அசுவத்தாமா, க்ருதவர்மா மூவரும் கௌரவர்களின் பக்கம் போரிட்டவர்கள்.

கௌதமர் என்ற முனிவருக்கும் அகலிகைக்கும் சதானந்தர் என்பவர் பிறந்தார். இவருடைய மகன் சத்ய திருதி. இவருடைய குழந்தைகள் கிருபனும் கிருபியும் ஆவார்கள். கிருபனின் தோழராகிய துரோணர் கிருபியை மணந்து அசுவத்தாமாவைப் பெற்றார். கௌரவர்கட்கும் பாண்டவர்க்கும் குருவான கிருபாச்சாரியார் பின்பு தொடர்ந்து குருவாக இருந்து வந்தார்.

கிருஷ்ணரின் தாத்தாவாகிய சூரசேனர் தேவகர்ப்பன் என்பவரின் பிள்ளை. இந்த தேவகர்ப்பனின் அண்ணனே க்ருத வர்மா. இவர் ஒரு யாதவர்.

பாண்டவர் பக்கம் போரில் எஞ்சியவர்கள் பாண்டவர்கள் ஐவரும், கிருஷ்ணரும் சாத்யகியும் ஆவர். கம்சன் இறந்த பிறகு தேவகி சுபத்ரை என்ற பெண்ணையும் சாத்யகி என்ற பிள்ளையையும் பெற்றிருந்தாள். இந்த சாத்யகியைப் பற்றி பெரிதாக விவரங்கள் ஒன்றும் தெரியவில்லை. யாதவகுலம் அழியத் தொடங்கியபோது சாத்யகி கிருஷ்ணரின் பேரனாகிய அநிருத்தனுடன் மோதி இருவரும் இறந்தனர். அபிமன்யூவின் புத்ரனாகிய பரீட்சித்து பாரத தேசம் ஆளலானான். இவருக்குப் பின்பு சுமார் 3000 வருடங்கட்குப்பின்பு இயேசு கிறிஸ்து உலகில் தோன்றினார். பின்பு 596 வருடங்கட்குப் பின்பு இஸ்லாம் தோன்றியது.

தொகுப்பு: ஆர். ராஜலெக்ஷ்மி - திருச்சி.

# இரயில் போக்குவரத்து கால அட்டவணை-திருப்பதி.

புனித பூமியான திருமலைக்கு அண்டை மாநிலங்களிலிருந்து வருகை புரிய இரயில் போக்குவரத்து வசதிகள் சிறப்பாகச் செய்யப்பட்டுள்ளன. அவ்வாறு வருபவரக்ளுக்கென இரயிலுடன் சாலை மற்றும் சாலையுடன் இரயில் (RCRT) பயணச் சீட்டுகளும் பயணிகளுக்கு அளிக்கப்படுகின்றது.

## இரயில்கள் சேரும், புறப்படும் காலவிவரங்கள் - திருப்பதி.

குறுகிய இருப்புப்பாதை இரயில் சேரும் காலம்

| இரயில் எண். | இரயிலின் பெயர் | இருந்து - வரை | சேரும் காலம் |
|---|---|---|---|
| 646 | பாண்டிச்சேரி பயணியர் | பாண்டிச்சேரி - திருப்பதி | 02.00 |
| 288 | பெல்லாரி பயணியர் | பெல்லாரி - திருப்பதி | 04.50 |
| 6800 | மீனாட்சி விரைவு | மதுரை - திருப்பதி | 05.30 |
| 188 | காட்பாடி பயணியர் | காட்பாடி - திருப்பதி | 08.55 |
| 7597 | வெங்கடாத்ரி விரைவு | குண்ட்டக்கல் - திருப்பதி | 13.00 |
| 158 | காட்பாடி பயணியர் | காட்பாடி - திருப்பதி | 11.55 |
| 642 | விழுப்புரம் பயணியர் | விழுப்புரம் - திருப்பதி | 15.05 |
| 248 | குண்டக்கல் பயணியர் | குண்ட்டக்கல் - திருப்பதி | 18.45 |
| 192 | காட்பாடி பயணியர் | காட்பாடி - திருப்பதி | 20.10 |
| | **குறுகிய இருப்புப்பாதை இரயில் புறப்படும் காலம்** | | |
| 643 | விழுப்புரம் பயணியர் | திருப்பதி - விழுப்புரம் | 02.45 |
| 247 | குண்ட்டகல் பயணியர் | திருப்பதி - குண்ட்டகல் | 06.00 |
| 191 | காட்பாடி பயணியர் | திருப்பதி - காட்பாடி | 07.00 |
| 157 | காட்பாடி பயணியர் | திருப்பதி - காட்பாடி | 10.30 |
| 7598 | வெங்கடாத்ரி விரைவு | திருப்பதி - குண்ட்டகல் | 13.30 |
| 6799 | மீனாட்சி விரைவு | திருப்பதி - மதுரை | 15.40 |
| 187 | காட்பாடி பயணியர் | திருப்பதி - காட்பாடி | 17.30 |
| 287 | பெல்லாரி பயணியர் | திருப்பதி - பெல்லாரி | 21.45 |
| 641 | பாண்டிச்சேரி பயணியர் | திருப்பதி - பாண்டிச்சேரி | 23.45 |
| | **அகல இருப்புப்பாதை இரயில் சேரும் காலம்** | | |
| 474 | காகிநாடா பயணியர் | காகிநாடா - திருப்பதி | 03.30 |
| 213 | மைசூர் பயணியர் | மைசூர் - திருப்பதி | 05.05 |
| 7488 | திருமலை விரைவு | விசாகப்பட்டினம் - திருப்பதி | 06.25 |
| 7424 | நாராயணத்ரி விரைவு | செகந்திராபாத் - திருப்பதி | 07.35 |
| 8439 | பூரி விரைவு (சனிக்கிழமைமட்டும்) | பூரி - திருப்பதி | 08.30 |
| 6057 | சப்தகிரி விரைவு | சென்னை - திருப்பதி | 09.20 |
| 7429 | ராயலசீமா விரைவு | ஹைதராபாத் - திருப்பதி | 09.40 |
| 440 | ஒங்கோல் பயணியர் | ஒங்கோல் - திருப்பதி | 12.00 |
| 7493 | பாலாஜி விரைவு(ஞாயிறு/புதன்) | மும்பை - திருப்பதி | 12.30 |
| 7489 | கொச்சின்-வாரனாசி (ஞாயிறு) | கொச்சின் - வாரனாசி | 13.45 |
| 8079 | ஒளரா விரைவு | ஒளரா - திருப்பதி | 16.05 |
| 6053 | திருப்பதி விரைவு | சென்னை - திருப்பதி | 16.50 |
| 207 | உள்நகரப் பயணியர் | தாடிபத்ரி - திருப்பதி | 20.15 |
| 530 | கூடூர் பயணியர் | கூடூர் - திருப்பதி | 20.35 |
| 7406 | கிருஷ்ணா விரைவு | செகந்திராபாத் - திருப்பதி | 21.30 |
| 195 | அரக்கோணம் பயணியர் | அரக்கோணம் - திருப்பதி | 23.15 |
| 6403 | கருடாத்ரி விரைவு | சென்னை - திருப்பதி | 19.50 |

## அகல இருப்புப்பாதை இரயில் புறப்படும் காலம்

| இரயில் எண். | இரயிலின் பெயர் | இருந்து - வரை | புறப்படும் காலம் |
|---|---|---|---|
| 196 | அரக்கோணம் பயணியர் | திருப்பதி - அரக்கோணம் | 04.05 |
| 7405 | கிருஷ்ணா விரைவு | திருப்பதி - செகந்திராபாத் | 05.30 |
| 208 | உள்நகரப் பயணியர் | திருப்பதி - தாடிபத்ரி | 06.30 |
| 529 | கூடூர் பயணியர் | திருப்பதி - கூடூர் | 06.55 |
| 8080 | ஔரா விரைவு | திருப்பதி - ஔரா | 09.45 |
| 6054 | திருப்பதி விரைவு | திருப்பதி - சென்னை | 10.05 |
| 7490 | வாரனாசி-கொச்சின் விரைவு (வெள்ளி) | வாரனாசி-கொச்சின் | 13.45 |
| 439 | ஒங்கோல் பயணியர் | திருப்பதி-ஒங்கோல் | 14.15 |
| 7430 | ராயலசீமா விரைவு | திருப்பதி-ஹைதராபாத் | 15.30 |
| 8440 | பூரி விரைவு (சனி) | திருப்பதி-பூரி | 16.10 |
| 6058 | சப்தகிரி விரைவு | திருப்பதி-சென்னை | 17.30 |
| 7423 | நாராயணாத்ரி விரைவு | திருப்பதி-செகந்திராபாத் | 18.30 |
| 7487 | திருமலை விரைவு | திருப்பதி-விசாகப்பட்டிணம் | 19.00 |
| 7494 | பாலாஜி விரைவு (வியாழன்/ஞாயிறு) | திருப்பதி-மும்பை | 21.40 |
| 214 | மைசூர் பயணியர் | திருப்பதி-மைசூர் | 22.30 |
| 473 | காகிநாடா பயணியர் | திருப்பதி-காகிநாடா | 23.30 |
| 6404 | கருடாத்ரி விரைவு | திருப்பதி-சென்னை | 06.30 |

## இரயில்கள் சேரும், புறப்படும் காலவிவரங்கள்-ரேணிகுண்ட்டா

| இரயில் எண். | இரயிலின் பெயர் | இருந்து - வரை | சேரும் காலம் | புறப்படும் காலம் |
|---|---|---|---|---|
| 7029 | கொச்சின்-ஹைதராபாத் விரைவு (செவ்வாய், வெள்ளி, சனி) | கொச்சின்-ஹைதராபாத் | 00.20 | 00.35 |
| 2625 | கேரளா விரைவு | திருவனந்தபுரம்-புதுதில்லி மையம் | 04.15 | 04.25 |
| 2617 | மங்கலா விரைவு | மங்களூர்-நிஜாமுத்தீன் | 05.15 | 05.30 |
| 6687 | நவயுகா விரைவு (செவ்வாய்) | மங்களூர்-ஜம்முதாவி | 09.35 | 09.45 |
| 6017 | ஹிமாசாகர் விரைவு (சனி) | திருவனந்தபுரம்-ஜம்முதாவி | 09.35 | 09.45 |
| 6009 | மும்பை விரைவு | மும்பை-சென்னை | 02.30 | 02.45 |
| 6063 | சென்னை விரைவு | தாதர்-சென்னை | 17.20 | 17.35 |
| 6511 | தாதர் விரைவு | தாதர்-சென்னை | 13.45 | 14.00 |
| 6010 | மும்பை விரைவு | சென்னை-மும்பை | 01.10 | 01.30 |
| 6009 | மும்பை விரைவு | மும்பை-சென்னை | 02.30 | 02.45 |
| 1082 | (ஜெயந்தி)மும்பை விரைவு | கன்யாகுமரி-மும்பை | 03.55 | 04.05 |
| 6064 | சென்னை விரைவு | சென்னை-மும்பை | 09.20 | 09.35 |
| 6512 | தாதர் விரைவு | சென்னை-தாதர் | 14.30 | 14.45 |
| 6688 | நவயுகா விரைவு (ஞாயிறு) | ஜம்முதாவி - மங்களூர் | 03.40 | 03.50 |
| 2618 | மங்களா விரைவு | நிஜாமுத்தீன்-மங்களூர் | 20.40 | 20.50 |
| 6018 | ஹிமாசாகர் விரைவு (வியாழன்) | ஜம்முதாவி-திருவனந்தபுரம் | 03.40 | 03.50 |
| 1081 | (ஜயந்தி) கன்னியாகுமரி விரைவு | மும்பை-கன்னியாகுமரி | 16.25 | 16.40 |
| 2626 | கேரளா விரைவு | புதுதில்லி-திருவனந்தபுரம் | 21.55 | 22.05 |
| 7030 | ஹைதராபாத் கொச்சின் விரைவு (செவ்வாய், வெள்ளி, சனி) | ஹைதராபாத்-கொச்சின் | 00.30 | 00.45 |

திருப்பதி இரயில்நிலைய தகவல்தொடர்பு தொலைபேசி எண். 131
ரேணிகுண்ட்டா இரயில்நிலைய தகவல்தொடர்பு தொலைபேசி எண். 75227

* * *

Edited and Published on behalf of T.T.Devasthanams by N S. Rama Murthy, M.A., and Printed at T.T.D. Press
by M Lakshmana Rao, B.A., L.P.T., Manager, T.T.D Press, Tirupati - 517 507



# ஸ்ரீ வேங்கடேஸ்வரா
# வன மேம்பாட்டுத் திட்டங்கள்

மனித இனம் என்றென்றும் மகிழ்ச்சியும், அதிசயமும் கொள்ளும் வகையில் காடுகள் ஆண்டாண்டு காலமாக விளங்கிவருகின்றன. இயற்கையின் ஆற்றலுக்கும் அழகுக்கும் என்றென்றும் புதுப்பொலிவும், புதுப்பொருளும் அளித்து வருவன காடுகளாகும்.

இத்தகு விலைமதிப்பற்ற இயற்கை வளத்தை புனிதமிகு திருமலையில் பாதுகாத்திடும் வகையில் 1981ஆம் ஆண்டு 'காடு வளர்ப்புத் திட்டம்' ஒன்றினை பெருமளவில் பெருமுயற்சியுடன் ஒரு புனித வேள்வியாக மேற்கொண்டு பல்வேறு இனங்களைச் சேர்ந்த சுமார் 25 லட்சம் மரங்களை திருப்பதி மற்றும் திருமலையில் வளர்க்கும் பணியில் தி.தி. தேவஸ்தானம் ஈடுபட்டது. இதன் மூலமாக திருமலை மலைச்சரிவுகள், திருப்பதி நகரம் ஆகிய பகுதிகள் யாவும் பசுமையான 'வனச் செல்வத்துடன்' விளங்கிடவேண்டும் என்பதே திருமலை திருப்பதி தேவஸ்தானத்தார் பெருவிருப்பமாகும்.

துவக்கப்பட்ட திட்டத்தின் பெருவெற்றியின் தூண்டுதலினால் தற்போது திருமலை திருப்பதி தேவஸ்தானம் பல்வேறு திட்டங்களைப் புகுத்தியுள்ளது. அதுதான் "ஸ்ரீவேங்கடேஸ்வரா காடு மேம்பாட்டுத்திட்டம்". இத்திட்டத்தினால், திருமலை திருப்பதி தேவஸ்தானம் மேற்கொண்டுள்ள இப்புது முயற்சிகளில் யாத்திரிகப் பொதுமக்களும் பங்கேற்கும் வகையில் வழிமுறைகள் செய்யப்பட்டுள்ளன. மேலும், இத்திட்டத்திற்கு நன்கொடை வழங்கும் பக்தர்களுக்கு பலவிதமான நன்மைகளும் செய்யப்பட்டுள்ளன. இந்த 'வேங்கடேஸ்வரா காடு மேம்பாட்டுத் திட்டத்தின்' முக்கிய விவரங்கள் பின்வருமாறு:-

## விருக்ஷ ஸம்வர்த்தனம்

நன்கொடை ரூ. **25,000**

(மரம் வளர்ப்புத் திட்டம்)

இத்திட்டத்தின் கீழ் 500 செடிகள் திருமலை மற்றும் திருப்பதியில் நடவப்படும். இத்திட்டத்திற்கு நன்கொடை அளிக்கும் நபரின் அல்லது அவர் விரும்பும் நபரின் பெயரில் இம்மரங்கள், இச்செடிகள் அழைக்கப்படும். இச்செடிகள் ஐந்தாண்டுகளுக்குப் பராமரிக்கப்படும்.

## விருக்ஷ பிரஸாதம்

நன்கொடை ரூ. **15000**

இத்திட்டத்தின் கீழ் ஒவ்வொரு ஆண்டும் பயன்தரக்கூடிய 100 பழ அல்லது மலர் விதைகள் நன்கொடையாளர் அல்லது அவர் விரும்பும் நபரின் பெயரில் 10 ஆண்டுகளுக்கு விநியோகிக்கப்படும்.

## ஸ்மாரக வனாலு (நினைவு மரங்கள்)

நன்கொடை ரூ.**5000**

இத்திட்டத்தின் கீழ் திருமலை - திருப்பதி மலைச்சரிவுகளில் உள்ள தோப்பு ஒன்றில் அங்கு விளையக்கூடிய ஒரு குறிப்பிட்ட 10 மரவகைகள் நடப்பட்டு, 5 ஆண்டுகள் அவை பராமரிக்கப்படும். நன்கொடையாளரின் பெயர் அத்தோப்பிற்கு வைக்கப்படும்.

## வன சம்ரக்ஷண பாகஸ்வாம்யம்

நன்கொடை : ரூ: **2000**

(காடு வளர்ப்பில் நும் பங்கு)

இத்திட்டத்தின் கீழ் ஏழுமலைகளில் இயற்கையான காட்டுச் சூழ்நிலை பாதுகாத்து மேம்படுத்தப்படும். இத்திட்டத்தில் பங்கேற்கும் நன்கொடையாளரின் ஆர்வத்தை நினைவுகூறும் வகையில் அவர்தம் பெயர் தேர்ந்த இடத்தில் காட்சியாக்கப்படும்.

சலுகை மாற்றங்களுடன் கூடிய இப்புதிய ஸ்ரீவேங்கடேஸ்வரா வன மேம்பாட்டுத் திட்டம் 1-2-96 முதற்கொண்டு செயல்படும். 31-1-96 தேதிக்கு முன்பு வரை இத்திட்டத்திற்கென நன்கொடை வழங்கிய பக்தர்கள், இத்திட்டத்திற்கென முன்பு அளிக்கப்பட்ட சலுகைகளைப் பெறுவர். நன்கொடை அளிக்கப்படும் மேற்படி தொகைகளுக்கு பிரிவு 35 CCB-இன் கீழ் 100 சதவிகிதம் வருமானவரி விலக்கு உண்டு.

கீழ்க்கண்ட முகவரிக்கு நன்கொடை அனுப்புங்கள்

THE EXECUTIVE OFFICER, T.T. DEVASTHANAMS - TIRUPATI-517 501.

